உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 37 ] காளயுக்தி ஆண்டு புரட்டாசித்திங்கள் 10—10—78 [ இதழ் 11

தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

ஏழாவது ஆண்டுக் குருபூஜைவிழா

24—10—78 செவ்வாய்க்கிழமை

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

என்னைவளை பாசஅரண்
   இன்னமுநீ கொள்ளவில்லை
அன்னையனே நீபதணை
   மானுலும் — முன்னைமலம்
ஓடவே எவ்வுயிர்க்கும்
   ஒட்டும் அருட்சேனை
தாடியிடுஞ் சொக்கநா தா.

— சொக்கநாத வெண்பா - 45

ஆசிரியர் :-

வித்துவான்

**இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

துணையாசிரியர் :-

மகாவித்துவான்

**சி. அருணைவடிவேல் முதலியார்**

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 37 || 10-10-78 || இதழ் 11

## உட்பொருள்

—★—





உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

| மலர் 37 | காளயுக்தி - புரட்டாசி - 10—10—78 | இதழ் 11 |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிர் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியிஞய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## வழிபட்டு உய்வோம்

**பக்தி வெள்ளம் :**

தமிழகத்தின் ஈராயிரம் ஆண்டுக்கால மொழி - இலக்கிய - சமூக வரலாற்றில் சைவ சமயத்திற்குப் பெரும் பங்கு உண்டு. வேத வழிப்பட்ட சமயங்களுள் சைவ சமயம் முன்னர்வைத்து எண்ணத் தக்க நீண்ட வரலாறும், திட்டமும் கொண்டு இலங்குவது. சங்க காலத்திற்குப் பின் களப்பிரர்வரவால் ஏற்பட்ட இருண்ட காலத்தைப் பயன்படுத்திக்கொண்டு, வடபுலத்திலிருந்து இங்குவந்த சமணரும் பௌத்தரும் தமிழைக் கருவியாகக்கொண்டு சைவத்தைத் தாழ்த்த முயன்றனர். என்ருலும் கி. பி. ஏழாம் நூற்ருண்டில் திருவவதாரம் செய்த திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் திருவருள் துணை யோடு, புறச்சமயக் களைநீக்கிச் சைவப்பயிர் வளர்த்தனர். சைவ சமயாசாரியர்களாகிய திருஞானசம்பந்தர் முதலிய நால்வர் பெருமக்க ளால் தமிழகத்தில் சைவ சமயம் புத்துயிர்பெற்றது. பக்திவெள்ளம் கரைபுரண்டு ஓடியது.

**திருவருட்செல்வர்:**

இறைவனுடைய புகழ் மாலைகளாக அமைந்துள்ள தேவார திருவாசகங்களிலும், இவற்றிற்கும் முற்பட்டதாகக் கருதப்படுகின்ற திருமூல நாயனாரின் திருமந்திரத்திலும் காணப்பட்ட சைவ சமய நுட்பங்களை ஒன்றுதிரட்டி, வேதாகமங்களின் துணையோடு, சைவ சித்தாந்த சாத்திர நூல்களை வகுத்த சான்றோர்களைச் சந்தாநு சாரியர்கள் என்று கூறுதல் மரபு. ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஒரு பெருந்தலைவனின் இயல்பு (பதி) எண்ணற்ற உயிர்த் தொகுதிகளின் தன்மை (பசு), உயிர்கள் தலைவனைச் சென்று அடையாவகை தடுக்கும் மலங்கள் (பாசம்) என்னும் இம் முப்பொருள்களின் தன்மையை அறிவு பூர்வமாக ஆராய்ந்து நிறுவுவன நமது சைவ சித்தாந்த சாத்திரங்கள். பதி, பசு, பாசம் என்பனவற்றிற்குத் திருத் தருமையாதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய அரிய விளக்கம் இங்கே நினைவுகூரத்தக்கது.

"என்னை அறிவென்றான் என்அறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும் — என்னை உன்னிப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம்"

இத்தகு அரியநுட்பங்களைக்கூறும் பெறலரும் வைப்பாகக் கருதத்தக்க ஞானசாத்திரங்கள் பதினான்கு. இவற்றுள், சுருக்கமும் தெளிவும்மிக்க தலைமணி நூலாக விளங்குவது 'சிவஞானபோதம்' என்னும் அரிய நூல். இதனை இயற்றியருளிய பேரருளாளர் ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார். இவரே சந்தானுசாரியருள் முதலாமவராகப் போற்றப்பெறும் சிறப்பினர்.

**கயிலாய பரம்பரை:**

"சந்தானம் என்பது மகன்மைப் பேற்றினைக் குறிப்பது. சித்தாந்த சாத்திர ஆசிரியர் மரபினை அகச்சந்தானம், புறச்சந்தானம் எனப் பிரிப்பர். ஒருவருக்குப் புத்திரசந்தானம்போல ஞானாசிரியன் - நன் மாணாக்கன் என வழிவழிவரும் உபதேசமரபினையே இங்கே சந்தானம் என்ற சொல்லால் குறிப்பிடுவர். திருக்கயிலாயத்தில் பரம்பொருளாகிய பரமேஸ்வரன் சிவஞானபோதச் செம்பொருளைத் திருநந்தியெம் பெருமானுக்கு உபதேசித்தருளினார். அவர்வழியே சனற்குமாரர், சத்தியஞான தரிசனிகள், பரஞ்சோதிமாமுனிகள் ஆகியோர் உபதேசம் பெற்றனர். இந்நால்வரும் விண்ணுலகத்தவர்; எனவே அகச்சந்தானு சாரியர் எனப்பெற்றனர். மெய்கண்டதேவர், அருணந்திசிவாசாரியார்,

மறைஞானசம்பந்தர், உமாபதிசிவாசாரியார் நால்வரும் நிலவுலகத்தவராதலின் புறச்சந்தானுசாரியர் எனப் போற்றப்பெற்றனர். எனவே மெய்கண்டாரின் மரபினைத் திருக்கயிலாயத்திலிருந்து வரும் உபதேச மரபாகக்கொண்டு திருக்கயிலாய பரம்பரை எனக்கூறுதல் மரபு. இம்மரபுவழியேவந்த கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசரிடம் ஞானோபதேசம் பெற்ற ஸ்ரீ குருஞானசம்பந்தரால் தோற்விக்கப்பெற்றதே திருத்தருமையாதீனம்.

**மெய்கண்டார் :**

புறச்சந்தானுசாரியருள் முதலாமவராகிய ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனுர் அருள் வரலாறு இங்கு நினைவுகூரத்தக்கது. திருமுனைப்பாடி நாட்டுப் பெண்ணுகடத்தில் வாழ்ந்திருந்த அச்சுதகளப்பாளரின் அருந்தவ மகவாய் கி. பி. 13 - ஆம் நூற்றுண்டில் அவதரித்து, அகச்சந்தானுசாரியருள் நாலாமவராகிய பரஞ்சோதிமாமுனிகளால் இரண்டாம் ஆண்டிலேயே சிவஞானோபதேசம் செய்விக்கப்பெற்று, அருணந்தி சிவாசாரியார் முதலிய மாணுக்கர்களுக்கு உபதேசித்து, சிவஞானபோதம் என்ற அரியநூலை வழங்கிய ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனுரின் அருள் வரலாறு தமிழகம் அறிந்தது. இத்தகு பேரருளாளராகிய ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனுரால் அருளிச் செய்யப்பெற்ற சிவஞானபோதமே சாத்திரங்கள் பலவற்றிற்கும் முதற்கண் வைத்து எண்ணத்தக்க பெருஞ் சிறப்பினைப் பெறுகிறது.

**சிவஞானபோதம்:**

சிவஞானபோதம் விளக்கும் செம்பொருள் பெரிதும் சிறப்பு உடையது. சைவ சித்தாந்தம் முப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டது. பதி, பசு, பாசம் என்பன. பதி பேரறிவுப்பொருள்; பிறர் அறிவிக்கவேண்டாது எல்லாவற்றையும் தாமே அறிவதோடு பிறருக்கு அறிவிக்கவும் வல்லது. பசுக்கள் எனப்படும் உயிர்கள் அணுதியானவை; அறிவித்தால் அறியும் தன்மைஉடையன. பாசம் என்பது தாமேயும் அறியாது: அறிவித்தாலும் அறியாது. இவை மூன்றும் நித்தியமாய் முதலும் முடிவுமின்றி, தோற்றமும் இறுதியுமின்றி விளங்குவன. பாசத்தை இறைவன் உயிர்களுக்குக் கருவிகளாகத் தந்துள்ளான். தத்துவம் என்பது கருவிகளையே குறிப்பன. உயிர்கள் இக்கருவிகளைக்கொண்டு அறிவைப் பெருக்கி முடிவில் இறைவனை அடைந்து இன்புறும். இவற்றைஎல்லாம் மெய்கண்டார் சுருங்கிய யாப்பில் 12 நூற்பாக்களுள் விளக்கியருளுகின்ருர் சிவஞானபோதத்திற்கு, இவர் மாணுக்கர் அருணந்தி சிவாசாரியார் வரைந்த பாடல் வடிவத்திலாகிய பேருரையே சிவஞானசித்தியார் என வழங்கப்பெறுவது.

" பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ? "

என வியப்பார் தாயுமான சுவாமிகள். ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார் இறையடியில் கலந்து இன்புற்றநாள் ஐப்பசிச் சுவாதித்திரு நாளாகும். இவ்வாண்டு ஐப்பசித் திங்கள் 15 ஆம் நாள் (1-11-78) புதன்கிழமையன்று **ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனாரின் குருபூஜைத்** திருநாள் அமைகிறது.

**மூன்று பூசைகள்:**

சைவர்கள் மேற்கொள்ள வேண்டியன மூன்று உண்டு. அவை குருபூசை, சிவபூசை, மாகேசுவரபூசை என்பன. முதலாவது குருவழிபாடு; இரண்டாவது சிவலிங்கவழிபாடு; மூன்றாவது சங்கம வழிபாடு. எண்ணற்ற அருள்ஞானச் செல்வங்களை வழங்கிய குரு மூர்த்திகளை நினைவுகூர்வதும், அவர்களது திருநாட்களைக் கொண்டாடுவதும் நம்மை நாம் வளர்த்துக்கொள்ளப் பெரிதும் துணையாவன.

**கயிலைக் குருமணி:**

இதே ஐப்பசித் திங்களில் சிவஞானபோதச் செம்பொருளை உலகுக்கெல்லாம் உணர்த்திவருகின்ற இத்திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்தின் 25 ஆவது குருமணிகளாகத்திகழ்ந்து 26½ ஆண்டுக்காலம் அருளரசு ஓச்சிய **ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் 7ஆவதுஆண்டுக் குருபூசை** விழாவும் அமைவது திருவருட் பொருத்தமாகவே தோன்றுகின்றது. தருமையாதீன அருளாட்சியில் பொற்காலம் கண்ட ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் இயற்றியுள்ள அருளறப்பணிகள் அளப்பில. கல்வி, மருத்துவம், சமூகநலம், திருமுறை வளர்ச்சி, திருக்கோயில் புனரமைப்பு, சித்தாந்த வளர்ச்சிக்குக் கல்லூரி போன்ற பல்வேறு துறைகளிலும் அவர்கள் காட்டிய அளவற்ற ஈடுபாட்டை இங்கே விரித்துரைக்க இடமில்லை. திருவருள் அழைப்பால் காசி சென்று 'முத்தையா' என்ற நாமத்தை உச்சரித்தவாறு இறையடி சேர்ந்த அவர்களுக்குத் தருமையில், காசி ஸ்ரீ விசுவேசர் கோயில் அமைப்பில் தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களால் குருமூர்த்த ஆலயம் அமைக்கப்பெற்று நித்திய நைமித்திக பூசைகள் சிறப்பாக நடைபெற்றுவருகின்றன.

**குருவருள்:**

சைவப் பேரன்பர்கள் ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனார் திருக்கோயில் கொண்டு விளங்கும் அவதாரத்தலமாகிய திருப்பெண்ணாகடத்திலோ,

அன்றிச் சிவஞானபோதச் செம்பொருளை உணர்ந்த திருவெண்ணெய் நல்லூரிலோ நடைபெறும் குருபூஜைப் பெருவிழாக்களில் பங்கேற்றும். இயலாதவர்கள் ஸ்ரீ மெய்கண்டதேவநாயனாரின் திருவுருவப்படத்தை இல்லத்தில் வைத்துப் பூசித்தும் வழிபடுவதோடு, தருமையாதீனச் சீடர்களும் அன்பர்களும் தருமையில் நடைபெறுகின்ற இவ்வாதீன 25 ஆவது குருமணிகளாகத் திகழ்ந்த ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின் குருபூஜைப் பெருவிழாவில் பங்கேற்றுத் திருவருளும் குருவருளும் பெற்று உய்வார்களாக.

வாழ்க மெய்கண்டதேவர் திருவடி !

வளர்க கயிலைக் குருமணி திருப்பணி !

---

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26-ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

11—9—78 அன்று நடைபெற்ற

தருமையாதீன ஆவணிமூல விழாவில் வழங்கியருளிய

# ஆசியுரை

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா — மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா.

சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கத் தருமையாதீனம் நானூறு ஆண்டுகளுக்கு மேலாக நாட்டுமக்களுக்கு நற்பணியாற்றிவருகிறது. நமது ஆதீன குருமூர்த்திகளாகிய ஸ்ரீ குருஞானசம்பந்தப் பெருமானுக்குக் கண்ணுக்கினியபொருளாய்க் கரத்தில் வந்தருளியசெந்தமிழ்ச் சொக்கன், தருமையாதீனம் தமிழுலகில் செந்தமிழ் மொழியையும் சிவநெறியையும் வளர்க்க அருந்துணையாயிருந்துவருகின்றார்.

**சிவஞானப் பண்ணை:**

தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் ஒன்றோடொன்று தொடர்புடைய திருநகரங்களாக விளங்குவன. கமலையில் வாழ்ந்த ஸ்ரீ ஞானப்பிரகாசர் நெறிப்படுத்த, தருமைக்கு ஞானம்பரப்பவந்தார் ஸ்ரீகுருஞானசம்பந்தர். அவரது ஆன்மார்த்தமூர்த்தி கூடல்மாநகர்ச் சொக்கேசன். குருநாதர் வாழ்ந்த கமலையும், குருஞானசம்பந்தர் வாழ்ந்த தருமையும், அவர்தம் ஆன்மார்த்த மூர்த்தியின் கூடல் மாநகரும் ஒருங்கே இணைந்து வழிபடற்குரிய திருநகரங்களாகத் தொடர்புகொண்டுள்ள பெருஞ்சிறப்பினவாகும்.

சிவஞானப் பண்ணையாக விளங்கும் தருமை, ஸ்ரீ குருஞான சம்பந்தரின் வருகைக்கு முன்னர் வில்வாரண்யமாக விளங்கியது.

இங்குள்ள தருமபுரீசுவரர் ஆலயத்தை அகத்திய முனிவரின் சீடர்கள் பரிபாலித்து வந்தனர். பண்டே தமிழ்ப்பண்ணையாக-அகத்தியர் ஆஸ்ரமமாக இருந்த தருமபுரம் ஸ்ரீ குருஞானசம்பந்தரின் ஞானப் பண்ணையாயிற்று. குருஞானசம்பந்தர் இத் தருமைக்கு வந்தபோது அகத்திய முனிவரின் சீடர்கள் தங்கள் ஆஸ்ரமத்தையும், தாங்கள் பரிபாலித்துவந்த ஸ்ரீ தருமபுரீஸ்வரர் ஆலயம் முதலானவற்றையும் அவரிடம் ஒப்படைத்துப் பொதியமலைக்குப் போய்விட்டார்கள். குருஞானசம்பந்தர் அகத்தியராஸ்ரமத்தையே தமது வாழ்விடமாகக் கொண்டு திருமடங்கண்டு தவம் பெருக்கிச் சிவநெறி பரப்பி வாழ்ந்தார்கள்.

அநுபூதி நிலையம் :

தருமையாதீனம் அனுபூதியாளர்கள் பலரையும் உருவாக்கி உலகிற்கு அருள்விளக்கம் புரிந்து வந்துள்ளது என்பதை இவ்வாதீன வரலாற்றைப் படிப்போர் நன்கு அறிவர்.

நான்காவது குருமூர்த்திகளாகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகள் குமரகுருபரரை நோக்கி,

ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

என்னும் பெரியபுராணப் பாடலுக்கு அனுபவப் . பயன் கூறுக என்று அருளியமையாலும், ஆதி குருமூர்த்திகள்,

ஆய்வார் பதிபசு பாசத்தின் உண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல்லாம் கல்விகேள்வி அல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள்ளே ஒன்றிரண்டுமறத்
தோய்வார் கமலையுள் ஞானப்ரகாசன் மெய்த்தொண்டர்களே.

என்று தொண்டர்களின் அனுபூதியை அருளியமையானும் சோடச கலாப்பிராசாத ஷட்கம் அருளிப் பிராசாதயோக நிலையை விளக்கி யமையாலும் இது இனிது விளங்கும். அனுபூதிமான்களின் தவச் சாலையாகத் தருமைத் திருமடம் விளங்கியதென்பதைப் பூசைமடத்தின் பின்புறமுள்ள பதினாறடுக்கம் போன்ற அமைப்புக்கள் இன்றும் காட்டுகின்றன.

குமரகுருபரர், வெள்ளியம்பலவாணர், சம்பந்த சரணாலயர், சிதம்பரநாத முனிவர், தமிழாகரர், படிக்காசுத்தம்பிரான் போன்ற அனுபூதிச்செல்வர்கள் இம்மடத்தின் சீடர்களாக விளங்கியுள்ளனர்.

**இலக்கிய ரஸிகமணி :**

செந்தமிழ்ச் சொக்கன், மதுரையில் வைகையின் தென் கரையில் திருக்கோயில்கொண்டு விளங்குவது போலத் தருமையில் காவிரியின் தென் கரையில் மடாலயங்கொண்டு எழுந்தருளியுள்ளார். மதுரைப் பெருமான் சங்கம் அமர்ந்து தமிழ் வளர்த்தவர்; புலவர்களைப் போற்றியவர்; பாவலர்கட்குப் பரிசில் வழங்கிச் சிறப்பித்தவர். அப்பெருமானை ஆன்மார்த்த மூர்த்தியாகக்கொண்டு விளங்கும் நம்தருமையாதீனமும் அவ்வருள் வழியிலேயே தமிழையும் புலவர்களையும் பல்லாண்டு களாகப் பட்டங்கள் வழங்கிப் பரிசில்கள் அளித்துப்பாராட்டிவருகிறது. அவ்வரிசையில் இந்தஆண்டு 'இலக்கிய ரஸிகமணி' என்ற பட்டமும் பதக்கமும் பாராட்டும் பெற்றவர், ஆங்கிலத்திலும் அருந்தமிழ் இலக்கியங்களிலும் இரண்டறக் கலந்த அனுபூதியாளராக - ரசிகமணியாகத் திகழும் நீதிபதி மகராசன் ஆவார். இலக்கிய ரஸிகமணி மகராசன் அவர்கள் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளால் இலக்கியத் தொண்டுகளாற்றி எல்லா நலங்களோடும் நீடுவாழ்வாராக.

**மனக்கவலை தீர வழி :**

உலகம் மனக்கவலையைப் போக்கும் மருந்தைத் தேடி அலைகிறது. கல்வி செல்வம் முதலியனவற்றால் குறைவின்றி வாழ்பவர்களும் தங்கள் மனக்கவலைகள் தீராமல் அமைதியின்றி வாழ்கின்றனர். மனக்கவலை போக்கும் மருந்தை முன்பே கண்டறிந்து வள்ளுவர் கூறியுள்ளார்.

> 'தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
> மனக்கவலை மாற்றல் அரிது'

என்பது அக்குறள். பிறவிக்கடலைநீந்த இறைவன்திருவடிகளே தெப்பமாகும் என்ற வள்ளுவர்,மனக்கவலையையும் அத்திருவடித்துணைதான் போக்கவல்லது என்கின்றார். இதைத்தான் நமது குருமூர்த்திகளும் "மனக்கவலை நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே, எவ்வுலகும் ஆக்குகின்ற சொக்கநாதா" என்று அருளியுள்ளார்.

உலகில் அவரவர் செய்த வினைகளை அவரவரும் அனுபவித்தே தீரவேண்டும். இன்பம் வரும்போது மகிழ்வதும் துன்பம் வரும்போது துவள்வதும் கூடாது. ஏழரைநாட்டுச்சனி என்று கூறுகின்றார்கள். ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் இது வந்தேதீரும். அவரவர் நிலை

கட்குத் தக்கபடி துன்பத்தைத்தரும். கடவுள்நம்பிக்கையோடு வாழத் தலைப்பட்டால் இத்தகைய துன்பங்கள் எதுவும் எந்நாளும் நம்மைத் தாக்கா.

கஷ்டம் வரும்போது அப்பர்பெருமானைப் போலத் திருவருளில் அழுத்தம் கொள்ளவேண்டும். சமயாசாரியர்கள் நால்வருமே துன் பங்களை அனுபவிக்கத்தான் செய்தனர். ஞானசம்பந்தரும், அப்பரும் சமணர்களால் பல தொல்லைகளுக்கு உள்ளாயினர். சுந்தரர் தன் சொந்தவாழ்வில் பொன் வேண்டி நலன் வேண்டிக் கவலையுற்றார். ஆனாலும் அவர்கள் தளர்வெய்தவில்லை. சிவஞானியர்கட்கும் அரு ளாளர்கட்கும் வரும் துன்பங்கள் உடலூழாய்க் கழியுமேதவிர அவர் களின் உயிரையோ, உணர்வையோ தாக்கா.

**திருவருள்துணை :**

மதுரையில் ஞானசம்பந்தர் அனல்வாதம், புனல்வாதம் மேற் கொண்டபோது இறைவனிடம் உத்தரவுபெற்றுத்தான் செயலாற்று கின்றார்.

“ வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே
பாதி மாதுட னாயபரமனே
ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆல வாயில் உறையும் எம்ஆதியே. ”

இப்பாடல் ஞானசம்பந்தர் இறைவனிடம் உத்தரவு கேட்பதைத் தெரிவிக்கிறது.

“ கூடலாலவாய்க் கோனை விடை கொண்டு
வாடல்மேனி அமணரை வாட்டிட ”

என்ற திருக்கடைக்காப்புச் செய்யுள் இறைவன் அவரது வேண்டு கோளுக்கு இசைவு தெரிவித்ததைக் கூறுகிறது.

ஞானசம்பந்தர் சமணர்களைக் கழுவேற்றியது சரியா? அவரது பெருமைக்கு இச்செயல் பொருந்துமா? என்றெல்லாம் கேட்கிறார்கள். ஞானசம்பந்தர் பெருமானைக் கேட்டுத்தான் இச்செயலில் ஈடுபட்டார் என்பதைப் புரிந்துகொள்ளவேண்டும். வாதத்தில் வெற்றிகண்ட ஞானசம்பந்தப்பெருமான் ஆலவாய்க் கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கிப் பாடுகிறார். அந்தநிலையை,

" கைகளும் தலைமீதேறக் கண்ணில் ஆனந்த வெள்ளம்
மெய்யெலாம் பொழியவேத முதல்வரைப் பணிந்து போற்றி
ஐயனே அடியனேனை அஞ்சல் என்றருளவல்ல
மெய்யனே என்று விடலாலவாய் விளம்பலுற்றார் "

என்பார் சேக்கிழார். அப்பதிகத்தின் மூன்றாவது பாடலாகிய,

" குற்றம்நீ குணங்கள்நீ கூடலால வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூல் கருத்தும்நீ அருத்தம் இன்பம் என்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் னுரைப்பதென் முகம்மனே "

என்ற பாடலில் ஞானசம்பந்தர், சமணர்கள் கழுவேற்றப்பட்டமைக்கு இறைவன் தம்மைக் கருவியாகக் கொண்டருளியதை நினைந்து நெகிழ்ந்தமை புலனாகிறது. தாம் செய்யும் செயல்களெல்லாம் அவ்விறைவன் செய்தனவேயாதலின் குற்றம் குணம் எதுவாயினும் அவை இறைவனையே சாரும் என்று அருளியிருப்பது காணலாம்.

பாண்டியன் சமணர்களைக் கழுவேற்ற எண்ணியபோது சைவர் இருந்துவாழ்மடத்தில் தீங்கு தகவிலாச் சமணர் செய்த தன்மையால் சாலும் என்றே வேந்தன்செய்கை விலக்கிடாதிருந்தார் திருஞான சம்பந்தர். அதாவது தனக்குத்தீங்குசெய்ததை எண்ணாமல் அடியார் திறத்துச் சமணர்கள் செய்த பிழையை உன்னியே அவர்களைக் கழுவேற்ற அனுமதித்தார் ஞானசம்பந்தர் என்கிறார் சேக்கிழார். அடியார்களுக்கு இடையூறு வந்தால் சமயாசாரியர்கள் அதனைப் பொறுக்கமாட்டார்கள் என்பதைப் பல வரலாறுகள் நமக்கு நன்கு எடுத்துக்காட்டும்.

திருஞானசம்பந்தர் திருநெடுங்களத் திருப்பதிகத்தில் ' நின்னடியார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே ' என்றுஅருளுவதையும், கொடிமாடச் செங்குன்றூரில் அடியார்களுக்குக் குளிர்சுரம் வந்த போது ' தீவினை வந்து எம்மைத் தீண்டப்பெறா திருநீலகண்டம் ' என்று அடியார்துன்பத்தைப் பொறாமல் அவர்களின் இடையூறுகளை அகற்றியருளுமாறு இறைவனை வேண்டிப்பாடுவதையும் காணலாம். இன்னோரன்ன வரலாற்றுப் பகுதிகள் சமயாசாரியர்கள் இன்னலைக் கண்டு நெகிழாமலும் இன்பத்தைக்கண்டு மகிழாமலும் இறையருளைப் போற்றி வாழ்ந்தமையை நன்குபுலப்படுத்தும்.

**அம்மையப்பர் :**

கடவுள் அம்மையப்பராக விளங்கி உயிர்கட்கு அருள்பாலிக்கின்றார். மணிவாசகர், வந்தி இருவருக்தும் இறைவன் அருள்செய்த

திருவிளையாடல், இறைவன் உலகமெல்லாம் அம்மை அப்பராக நிறைந்தவன் என்பதை எடுத்துக்காட்டுகிறது. கடவுள் அம்மையப்பராக இருத்தலால் தாவரம் முதல் தேவர்கள்வரை எல்லாமே ஆண் பெண்ணாக இருந்தே செயல்படுகின்றன. பதியாகிய இறைவன் அம்மையப்பராக விளங்கிப் பசுக்களையும் அவ்வாறே ஆணும்பெண்ணு மாக விளங்குமாறு செய்தருளி, பாசமாகிய ஜடப்பொருள்களில் ஆண் பெண் போன்ற இருதன்மைகளை நிலைபெறச்செய்துள்ளார். மின்சக்தி இயக்கம் இவ்வாறே பாசிடிவ் நெகடிவ் என்ற இரண்டு சக்திகளாகவே இயங்குகிறது. இறைவன் மணிவாசகர்க்கும் வந்தியம்மைக்கும் அருள் வழங்கிய ஆவணிமூல விழா இறைவன் ஆணுக்கும் பெண்ணுக்கும் அருள்புரிவதைத் தெரிவிக்கிறது.

இத்தகைய ஆவணிமூல விழாவில் சொக்கநாதப்பெருமான் சந்நிதியில் பட்டம் வழங்கப்பெற்ற அன்பர் திரு. மகராசன் தமிழ் உலகிற்கும் சமய உலகிற்கும் நீதித்துறைக்கும் தொண்டுசெய்தவர். ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியாரின் சீடர். ரஸிகமணியின் வாரிசாக விளங்கும் மகராசனை, இன்று ‘ இலக்கிய ரஸிகமணி ’ என்ற பட்டமளித்துப் பாராட்டுகிறோம்.

உலக வாழ்க்கையில் பெரியோர் பலரும் தம்மை வழிபடுபவரை மகராசனாக இரு என் றுவாழ்த்துவார்கள். இவர் பெயரிலும் மகராசனாக இருக்கிறார். மகராசன் என்றும் மகராசனாகவே இருக்கவும் அவரது தொண்டுகள் சிறக்கவும் வாழ்த்துகிறோம்.

மாணவர்களுக்கு :

இன்று ஆவணிமூல விழாவோடு கல்வி நிலையங்களின் ஆண்டு விழாவும் நிகழ்கிறது. மாணவர்களுக்கு இன்று சில அறிவுரைகள் கூறுதல் பொருத்தம். அமெரிக்க ஜனாதிபதி காலம் சென்ற கென்னடி ‘ நாடு உனக்கு என்னசெய்தது என்றுமட்டும் கேட்காதே ; நீ பிறந்த நாட்டிற்கு என்ன செய்தாய் என்று கேட்டுக்கொள் ’ என்று கூறியது போல நாம் இலக்கியத்திற்கும், சமயத்துக்கும், சமுதாயத்துக்கும் பணி செய்யவேண்டும். துடைக்கினும் போகேன் என்று அப்பர்பெருமான் கூறியதுபோல விடாது பணிசெய்யவேண்டும். நிறுவனத்தால் நாமும் நம்மால் நிறுவனமும் பெருமை பெறத்தக்கவகையில் மாணவர்கள் நடந்துகொள்ளவேண்டும்; ஏன் மனித இனமே அப்படிநடந்தால்தான் நாடு உயரும். நற்சமுதாயம் உயரும். மாணவர்களும் மக்களும் சிறந்து விளங்க இதுபோன்ற அறிவுரைகளை மனத்தில்கொண்டு முயல வேண்டும். எல்லாம் இனிதேநிகழச் செந்தமிழ்ச்சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

வாழ்க மகராசன் ! வளர்க ரஸிகத்தன்மை !

# தருமையாதீன ஆவணிமூல விழாவில்

"இலக்கிய ரஸிகமணி" பட்டம்பெற்ற

## திரு. S. மகராஜன் அவர்கள்

## ஆற்றிய உரை

போற்றுதலுக்குரிய குருமகாசந்நிதானம் அவர்களின் திருவடிகளை வணங்கித் தொடங்குகின்றேன்.

எனக்கு அண்ணுமலையில் B. Sc., பட்டம் கிடைத்தபோதும், சென்னைப் பல்கலைக்கழகத்தில் B. L. பட்டம் வாங்கினபோதும் ஏற்படாத உன்னதமான மகிழ்ச்சி இன்று மகாசந்நிதானம் அவர்களின் திருக்கரத்தால் இப்பட்டம் பெற்றபோது ஏற்பட்டுள்ளது. காலமறிந்து தந்துள்ளார்கள். அறிவும் ஆசாரமும் தவமும் உடைய மகாசந்நிதானம் திருக்கை விசேடத்தால் நான் 'இலக்கிய ரஸிகமணி' ஆயினமை பெருமை தருவதாகும்.

அருள் தருகின்ற குருமார்கள் புற ஆசாரம் மட்டுமின்றி அகவொழுக்கமும் நிறைந்தவர்களாக இருத்தல் வேண்டும். ஒரு செய்தி நினைவுக்கு வருகிறது. சீடனெருவன் தான் சுவர்க்கம் செல்வதாகக் கனவு கண்டான். சுவர்க்கப்படிகளில் ஏறிக் கதவைத்திறக்கச்சொன்ன போது 'கேப்ரியல்' என்ற தேவதூதன் 'இது அல்ல சுவர்க்கம் - அதோ அங்கே இருக்கிறது - அங்கு போ' என்ருன். மேலும் சொன்ஞன் : 'நீ போகும்போது மனமார நீ செய்த - நினைத்த தீமைகளை எல்லாம் ஒவ்வொன்ருக எண்ணி - இச்சுண்ணக்கட்டியால் கோடு வரையவேண்டும். ஒவ்வொரு கோடும் ஒவ்வொரு படியாகி பாவமெல்லாம் கரைந்தபின் உனக்குப் பேரின்பவீட்டுக்கதவு திறந்து வழிவிடும்' என்ருன்.

சீடனும் அச்சுண்ணக்கட்டியால் கோடுகளைக் கீறிக்கொண்டே செல்ல, படிகள் தோன்றி வளர்ந்துகொண்டே இருந்தன. காரணம் அவ்வளவு பாபச் செயல்கள் - நினைவுகள் இருந்திருக்கின்றன அவனுள்ளத்தில். இந்தப்படிகளின் தோற்றம் ஓயாதா? சுவர்க்கம் சென்று அடைவோமா? என்று ஏங்கி எதிரில் நோக்கியபோது தனது குரு வந்துகொண்டிருக்கக் கண்டான்.

குருநாதர் சுவர்க்கம் சென்று கண்டு வந்திருக்கிருர்; சுவர்க்கம் இன்னும் எவ்வளவு தூரம் உள்ளது என்பதை அவரிடம் கேட்டுத் தெரிவோம் என்று எண்ணிய சீடன் 'குருநாதரே! ஏன் இறங்கி வருகின்றீர்? சுவர்க்கம் இன்னம் எவ்வளவு தொலைவில் உள்ளது?

என்று கேட்க, - குரு 'எனக்குத் தேவதூதன் தந்த சுண்ணக் கட்டி தீர்ந்துவிட்டது; மற்றொன்றைப் பெறுவதற்காகக் கீழே வந்து கொண்டிருக்கிறேன்' - என்றாராம். எப்படி இருக்கிறது குருமார்களின் அக ஆசாரம் பார்த்தீர்களா?

அப்படியில்லை நம்முடைய பாரதநாட்டு முனிபுங்கவர்கள். மாயூரத்திற்கு அருகிலே சித்தர்காடு என்ற இடத்தில் பல சித்தர்கள் வாழ்ந்து சமாதியடைந்துள்ளனர். 'சிற்றம்பல நாடிகள்' என்ற அருளாளர் சமாதி அங்கே விளங்குகிறது. அந்தப் பிரதேசம் முழுவதுமே ஒரு ஆகர்ஷணசக்தி - மானசீக அலை வியாபித்திருப்பதை மக்கள் உணருகிறார்கள். அவர்களுடைய அந்த ஆற்றலால் அவர்கள் நம்மைக் காணுகின்ற அளவிலேயே நம் மன அழுக்குகள் நீங்கிப் போகின்றன. இன்று காலை தான் அங்கே சென்று வழிபட்டுவந்தேன். அந்த இடத்திலுள்ள தெய்வீகத் தன்மையை - புனிதமாக்கும் சக்தியை நேரில் உணர்ந்தேன்.

இத்தகைய சக்திவாய்ந்தகுரு கமலையில் இருந்த ஞானப்பிரகாசர். அவரைப் புரிந்துகொண்ட நற்சீடராம் குருஞானசம்பந்தர் கூறுகிறார்:

ஞானப்ர காசன் கமலையில் வாழ்குரு நாதன் சொன்ன
மோனப்ர காசத்தைக் கேட்டவன் றேநெடு மூச்சலைவற் (று)
ஊனப்ர காசச் செயலற்று என் உள்ளம் உருக்கி என்றும்
வானப்ர காசத்து நேயத்தி லேசென்று மண்டியதே.

பேருண்மை சொல்லில் அடங்காது. அதனை மௌனத்தால்தான் உணர்த்தவும் உணரவும் முடியும் என்பதை எவ்வளவு அழகாகக் கூறுகிறார் பாருங்கள். நம்நிலை என்ன என்பதையும் எண்ணிப் பாருங்கள்.

வேடிக்கை நிறைந்த சம்பவம் நினைவுக்கு வருகிறது. 1931-ல் லண்டனில் வட்டமேஜை மாநாடுநடந்தது. அப்போது தென்னிந்திய உணவு வகைகளை எல்லாம் தயாரித்து ஆங்கிலேய பட்லர்கள் (சமையற்காரர்கள்) பரிமாறினார்கள். கராச்சியிலிருந்து அப்பளம் போயிருந்தது. அதனை, ஒவ்வொரு அப்பளத்திற்குமேலும் ஒரு ஆயில் பேப்பரைப் போட்டு - பாதுகாப்பாக அனுப்பியிருந்தனர். பட்லர்கள் அப்பளத்தை வீசிவிட்டு ஆயில் பேப்பரைப் (Oil Paper) பொரித்துக் கரியாக்கி வைத்திருந்தனர்.

நம் நிலையும் அப்படித்தான். சாரத்தை விட்டுச் சக்கையை வைத்துப் போற்றும் மனோபாவம்தான் இன்று இருக்கிறது.

மீன்கள் தண்ணீரில் இருந்தும் அதனை உணராததுபோல் - நாமும் இறைத் தத்துவத்துள் இருந்தும் அதனை உணர்ந்தோமில்லை.

என் போற்றுதலுக்குரிய ரசிகமணி டி. கே. சி. அவர்கள் எல்லாவற்றையும் ரசிப்பவர். ரசிப்பதற்கும் விரிந்த உள்ளம் வேணும். ஒரு சமயம் அவர் கடும்காய்ச்சலுக்கு ஆளாயிருந்தபோது அவரைத் தென்காசியிலிருந்து நான் காணச் சென்றேன். தர்மாமீட்டர் நாவுக்கடியில் வைக்கப்பட்டிருந்தது. 104 டிகிரி என்று அது சுரவேகத்தைக் காட்டியது.

என்னைக் கண்டதும் உற்சாகம் மிக்கவராய் திருவாசகத்திலிருந்து 'செப்பார் முலைபங்கன்' - என்ற தொடக்கப்பாடலொன்றைப் பாடி விளக்க ஆரம்பித்து விட்டார்கள். நான் எவ்வளவுதடுத்தும் கேளாமல் முக்கால் மணி நேரம் ரசித்துச் சுவைத்தபின் நெடுமூச் செறிந்து அமைந்தார். என்ன ஆச்சரியம்! தர்மாமீட்டர் 98 டிகிரி எனக் காய்ச்சல் அளவைக் காட்டியது.

நான் உத்தியோக உயர்வு பெற்றுத் தென்காசியை விட்டுப் போகிறதைச் சொன்னதும் அவர்கள் அப்பதவியிலிருந்து சீக்கிரமே டிஸ்மிஸ் ஆகி இங்கு என்னுடனே இருக்க வந்துவிடு - என ஆசிர்வதித்தார்கள். எப்படிப்பட்ட ஈடுபாடு இருந்தால் - இப்படிச் சொல்லி யிருப்பார்கள் என்று புரிந்துகொள்ளுங்கள்.

ரசிகமணிபோல் நீங்கள் இருந்து ரசிக்க ஒரு பாடல் சொல்லுகிறேன். பலபேர் கூடும் - பல வண்டிகள் சந்திக்கும் சாலைச்சந்திப்பில் ஒரு போலிஸ்காரர் நின்று கைகளை மேலே கீழே தூக்கிச் சமிக்ஞை காட்டுவது உண்டல்லவா! கிராமத்தான் அவனைப் பார்த்துப் பைத்தியம் என்ருல் நமக்குச் சிரிப்பு வராதா! அப்படித்தான் இலக்கண மோதல்கள் ஏற்படாமல் இருக்க மோனை - எதுகை இருந்து பாடல்களை ஒழுங்குபடுத்தும். திருமழிசை ஆழ்வார் பாடலொன்று பாருங்கள்:

" நின்ற தெந்தை ஊரகத் திருந்த தெந்தை பாடகத்
தன்று வெஃக ணைக்கி டந்த தென்னிலாத முன்னெலாம்
அன்று நான்பி றந்திலேன் பிறந்த பின்ம றந்திலேன்
நின்ற தும்மி ருந்ததும்கி டந்த தும்என் நெஞ்சுளே. "

இந்தப்பாடலைச் சந்தத்துடன் - ஓசையுடன் படிக்கப் படிக்க - அது உயிர்பெறும்; இன்பம் தரும். அப்படி இலக்கியங்களைப் படித்து இன்பம் பெறுக என்று மாணவர்களைக் கேட்டுக்கொண்டு, ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்திற்கு நன்றியை - வணக்கத்தைப் புலப்படுத்தி முடித்துக்கொள்கிறேன்.



## திருவாரூர் பன்னிரு திருமுறை மன்றம்.

### 26—9—78 செவ்வாய்க்கிழமை நடந்த பொதுக்குழுக் கூட்டத்தில்

# நிறைவேற்றிய தீர்மானங்கள்

---

1. பல்லாயிரம் ஆண்டுகட்குமுன்பிருந்தே தமிழகத்தைஆண்ட பெருவேந்தர்கள், குறுநில மன்னர்கள், வள்ளல்கள், பெருநிலக்கிழார் கள், எளியவர்கள் என்ற பலதிறப்பட்டவரும் தமிழகத் திருக்கோயில் களின் வழியாகச் சமதர்ம வாழ்வை மக்களிடை நிலைபெறச்செய்து அத்திருக்கோயில்களுக்கும், அவற்றைச்சார்ந்த திருமடங்களுக்கும் பிற அறநிறுவனங்களுக்கும் எண்ணற்ற இறையிலிநிலங்களை உரிமை யாக்கினர். தெய்வ நெறியில் பொது அறங்கள் வளர அவ்வாறு நிலங் கள் வழங்கியதைச் செப்பேடுகளிலும் சிலையேடுகளிலும் வரைந்து' இவற்றிற்கு முட்டுப்பாடு வரச்செய்வோர் பெரும் பாவங்களுக்கு உள்ளாவர் என்றும் குறிப்பிட்டுள்ளனர். இப்பேரறங்களுக்கு இழுக்கு நேர்ந்தகாலத்தில் பல ஆண்டுகளுக்கு முன் தமிழ்நாட்டு அரசு இந்து அறநிலையப் பாதுகாப்புக் கழகத்தை நிறுவி அப்பேரறங்களை நிலைபெறச் செய்தன. இன்றுள்ள நிலையில் அப்பேரறங்களுக்கான நிலங்களை உழுவோரும் பிறரும் நலமடையச் சட்டமியற்றுவதால் மேற்கண்ட கோயில்களும் பிறவும் முட்டுப்பாடெய்தித் தம் தெய்வப் பணிகளையும் அறப்பணிகளையும் நடத்த முடியாது நலிவுறுகின்றன. இவை பழம்பெருமை அடையச்செய்யத் தமிழக அரசு ஆவன செய்ய வேண்டுமென்று இக்கூட்டம் கேட்டுக்கொள்ளுகிறது.

2. மேற்கண்ட நிறுவனங்கள் பழம் பாக்கியாக உள்ள குத்தகை களைப் பெறவும், அந்த அந்த நிலங்களைத் தத்தமக்குச் சொந்தமாக வைத்துக்கொள்ளவும் வேண்டிய சட்டங்களை இயற்றும்படி இக் கூட்டம் தமிழக அரசைக் கேட்டுக்கொள்ளுகிறது.

3. இன்று எல்லாக் கோயில்களிலும் பூசை, விளக்கீடு, பெரு விழா, சமயச் சொற்பொழிவு போன்ற தெய்வ உணர்வை மக்க ளிடையே பரப்பும் நிகழ்ச்சிகள் முட்டுப்பட்டுள்ளன. இவை பழைய நிலையை அடைய இந்து அறநிலையப் பாதுகாப்பு ஆணையர் அவர்கள் ஆவன செய்யுமாறு இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

4. அன்னியராய் ஆண்டவர்கள் இந்துக்களுக்குமதத்துறையில் துன்பம் நேராதவாறு ஆண்டிருக்க; மக்களாட்சி நிலவும் இந்நாளில் சமய நம்பிக்கை உடையவரும் மனம் புண்படாது வாழுமாறு செய்யத் தமிழக அரசு தன் ஆணையை மக்களிடத்தே செலுத்த வேண்டும் என்று இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

5. இந்துக்கோயில்களில் வரும் வருமானத்தைக்கொண்டு பிற மதங்கள் வளர்வதற்கான திட்டங்களைச் செய்யாதிருக்கும்படி ஆணையிட மத்திய அரசை இக்குழு கேட்டுக்கொள்ளுகிறது.

ரா. கணேசன்,
தலைவர்,
பன்னிரு திருமுறை மன்றம், திருவாரூர்.



---

## பார்வையாளர் குறிப்பு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

### திருப்பனந்தாள், ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ்தானம்.

இந்த ஸ்தலத்தில் ஒரு தனி மன அமைதியைக் கண்டேன். எங்கும் கண்டிராத ஒரு அனுபவமாகவே அமைந்தது. இந்த ஆலயம் சிறந்த முறையில் பரிபாலிக்கப்பட்டு வருகின்றது. இதில் காணும் தூய்மை என்னைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. இதற்குப் பொறுப்பான கோயில்அலுவலர்களுக்கும் தருமபுரம்ஆதீனம் குருமகா சந்நிதானத்திற்கும் என் நன்றி. அவர்கள் பணி நீடிக்கட்டும்.

அ. ரா. கிருஷ்ணமூர்த்தி,
19—9—78. மாவட்ட வணிகவரி அலுவலர்,
கும்பகோணம்.

ஆவணிமூல விழா :

தருமையாதீனம் ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் சந்நிதியில்



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்,
சென்னை, ஓய்வுபெற்ற உயர்நீதிமன்ற நீதிபதி
திரு. எஸ். மகராஜன் அவர்களுக்கு
இண்டைமாலை சூட்டி ஆசியருளுதல்.
11 — 9 — 78

தருமையாதீனம் ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் சந்நிதியில்



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
திரு. எஸ். மகராஜன் அவர்களுக்கு
'இலக்கிய ரஸிகமணி' பட்டம் வழங்கியருளுதல்
11 — 9 — 78

# திருக்கருகாவூர், திருப்பாலைத்துறைத் தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

வித்துவான். திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம்.ஏ.,

சோழவளநாட்டில் தஞ்சை மாவட்டத்தில் காவிரியின் தென் கரையில் விளங்கும் தேவாரப்பாடல் பெற்ற சிவத்தலங்களில் திருக் கருகாவூர், திருப்பாலைத்துறை ஆகிய இருதலங்களும் 18, 19 ஆவது தலங்களாகத் திகழ்வனவாகும்

திருக்கருகாவூர் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் பாடியருளிய இரண்டு திருப்பதிகங்களையும், திருப்பாலைத்துறை திருநாவுக்கரசர் பாடியருளிய ஒருதிருப்பதிகத்தையும் பெற்று விளங்குகின்றன.

## திருக்கருகாவூர்

இத்தலம் மாயூரம்–தஞ்சை இருப்புப்பாதையில் பாபநாசம் புகை வண்டி நிலையத்திலிருந்து தெற்கே 5 கி. மீட்டர் தூரத்தில் உள்ளது. கும்பகோணத்திலிருந்து மெலட்டூர் வழியாகத் தஞ்சை செல்லும் பேருந்தில் சென்றால் திருக்கருகாவூரிலேயே இறங்கலாம். தஞ்சையி லிருந்து இவ்வூருக்குவர நகரப் பேருந்து வசதியும் உள்ளது. இந்து சமய அறநிலையத்தின் பரிபாலனத்தில் இக்கோயில் நடைபெற்று வருகிறது. வெட்டாற்றின் தென்கரையில் இயற்கை வளங்களோடு ஊர் எழிலுற்றுத்திகழ்கிறது.

ஆதரவற்ற ஒரு பெண்ணிற்காக இத்தலத்திலுள்ள இறைவி மருத்துவம் பார்த்துக் கருவைக் காத்தபடியால் இத்தலம் கருகாவூர் எனப் பெயர் எய்திற்று. முல்லைவனம், மாதவிவனம், கருப்பபுரி என்ற பல பெயர்களும் இத்தலத்தின் வேறுபெயர்களாக வழங்கப்படும்.

அடிக்கடி கர்ப்பச்சிதைவு ஏற்பட்டு மகப்பேறின்றி வருந்தும் பெண்கள் பலரும் இத்தலத்திலுள்ள இறைவனையும் இறைவியையும் வழிபட்டு நேர்த்திக்கடன் செய்து நன்மக்கட்பேற்றை அடைந்துவரு கின்றனர் என்பது இத்தலத்தின் குறிப்பிடத்தக்க அற்புதநிகழ்ச்சி யாகும்.

**தலப்பெருமை :**

காவிரித் தென்கரையில் உள்ள பாடல்பெற்ற தலங்களாகிய திருக்கருகாவூர் ( முல்லைவனம் ) அவளிவணல்லூர் ( பாதிரிவனம் ) அரதைப்பெரும்பாழி ( வன்னிவனம் ) திருஇரும்பூளை ( பூளைவனம் ) திருக்கொள்ளம்பூதூர் ( வில்வவனம் ) ஆகிய ஐந்து தலங்களைப் பஞ்ச ஆரண்யத்தலங்கள் என்று கூறுவர். இவற்றை விடியல், காலை, நண்பகல், மாலை, அர்த்தயாமங்களில் முறையே வழிபடுவோர் எல்லா நலன்களையும் எய்துவர் என்று கூறப்படுகிறது. திருக்கருகாவூரின் சிறப்பு ஸ்காந்த புராணத்தில் க்ஷேத்திரவைபவ காண்டத்தில் சனற்குமாரசங்கிதையில் நாரதமுனிவருக்குச் சனற்குமாரர் கூறுவதாக விவரிக்கப்பெற்றுள்ளது.

எந்த நாட்டில் இருந்தாலும் மாதவிவனம் எனப் பெயர்பெற்ற இத்தலத்திற்குச்செல்லும் விருப்போடு மூன்றடி நடப்பார்களானல், முதலடியில் அவர் செய்த பாவங்கள் எல்லாம் அகலும் எனவும், இரண்டாம் அடியில் அமரர் உலகம் மேலுலகம் எல்லாம் அவர்கட்கு உரிமையாகும் எனவும், மூன்ரும் அடியில் அவர்கள் சிவசாயுச்சியம் பெறுவது உறுதியாகிறது எனவும் தலபுராணம்கூறுகிறது. திருக்கருகாவூரை ஒருவர் நினைத்தாலும், சொன்னலும், அத்தலத்தில் வசித்தாலும், கண்டாலும், அத்தலப்பெருமையினைக்கேட்டாலும், பிறவூர்களுக்கு இத்தலத்தின்வழியே சென்ருலும் தீமைகள் எல்லாம் அகலப்பெற்றுப் பலவகைப் போகங்களையும் பெற்று முடிவில் இறைவன் திருவடிகளில் இரண்டறக்கலப்பது சத்தியம் என்கிறது தலபுராணம்.

இத்தலத்துக் கற்பகவிநாயகரும் நந்திதேவரும் உளிபடாதமூர்த்திகளாவர். விநாயகர் வேண்டுவனவற்றையெல்லாம் அருளும் வள்ளன்மை உடையவராய் விளங்குகின்ருர். சோமாஸ்கந்த அமைப்பில் இறைவன் கோயில் வலப்புறமும், இறைவி கோயில் இடப்புறமும், முருகன் கோயில் நடுவிலும் உள்ளன.

இத்தலத்தில் பிர்மா, கார்க்கியர், கௌதமர், குஜத்துவசன், சங்குகர்ணன், நித்துருவர், பீமசேனன், புண்ணியத்துவசன், சந்திரன் முதலியோர் வழிபட்டு அருள்நலம் பெற்றுள்ளனர். இத்தலத்தில் விளங்கும் பெருமான் சுயம்புமூர்த்தி ஆவார். அப்பரடிகளால் 'கருவாய் உலகுக்கு முன்னே தோன்றும் கண்ணும்' என்று போற்றப் பெற்றவர். திருஞானசம்பந்தர் முல்லைவனம் என்ற பெயருடைய இத்தலத்தின் சிறப்பையும் முல்லைமலரணிந்த இறைவன் பெருமையையும் பாடல்தோறும் முல்லையோடு தொடர்புபடுத்திக் கூறியருளுகிருர். இத்தலத்தில்விளங்கும் அம்பிகை நித்துருவரின் பத்தினி வேதிகைக்கு ஊர்த்துவபாத மகரிஷியின் சாபத்தினுல் ஏற்பட்ட கருச்

சிதைவைக்காத்து கருவுக்கு உருக்கொடுத்தகாரணத்தினுல் ஸ்ரீ கர்ப்ப ரட்சகி என்ற பெயருடன் விளங்குகின்ருள். தொன்றுதொட்டு இத் தலத்தில் வாழ்பவர்களுக்கோ அல்லது வழிபடுவோர்க்கோ குறைப் பிரசவம் ஏற்படுவதில்லே. கர்ப்பவேதனையும் உண்டாவதில்லே. இத் தலத்தில் கருவோடு மரணமடைந்த தாய்மார்கள் இல்லே என்று கூறுகின்றனர்.

சுவாமியின்பாணம் - பிருதுவியாலானது. புனுகுசட்டம்மட்டுமே சாத்தப்பெறுகிறது. முல்லேக்கொடி சுற்றிய வடு திருமேனியில் காணப்படுகிறது. ஆவுடையாருக்குமட்டுமே அபிஷேகம் செய்யப் படுகிறது. சுவாமிக்கு நாடோறும் முல்லேமலர் சாத்தப்பெறுகிறது. இத்தலத்திற்குவந்து தீர்த்தங்களில்நீராடி வழிபடுவோர் எல்லாநலன் களேயும் எய்துவர் எனத் தலபுராணம் கூறுகிறது. ஞானசம்பந்தர் அப்பர்பாடிய இரண்டு திருப்பதிகங்கள் உள்ளன. சுந்தரர் அருளிய ஊர்த்தொகைத் திருப்பதிகத் திருப்பாடலிலும் இத்தலப்பெயர் குறிப் பிடப்பெற்றுள்ளது.

**கோயில் அமைப்பு :**

வெட்டாற்றின் தென்கரையில் ஊரின்நடுவே அழகியதோற்றத் துடன் கிழக்குநோக்கி விளங்குகிறது திருக்கோயில். கோயிலேச்சூழ நான்கு திருவீதிகள் உள்ளன. கோயிலின் எதிரே திருப்பாற்குளம் எனப் பெயரிய திருக்குளம் அமைந்துள்ளது. ஐந்து நிலேகளோடு கூடிய இராஜகோபுரம் கோயிலுக்கு அழகுதருகிறது. திருவாயிலில் தருமையாதீன சமயப் பிரசாரகர், திருக்கருகாவூர், தொண்டர், திரு. கோ. சிவஞானம் அவர்கள் அன்பர்களின் ஆதரவோடு திருத்தருமை யாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலேக் குருமணி அவர்கள் பெயரால் நிறுவிய நூல்நிலேயம் உள்ளது. கோயிலின் வலப்புற வாயிலில் ஸ்ரீ சர்வசித்தி விநாயகர் விளங்குகிருர்.

இராஜகோபுர நுழைவாயிலேக்கடந்தவுடன் வெளி முதற்பிரா காரத்தை அடையலாம். கோபுரவாயிலின் தென்புறம் திருநந்தவன மும், வடபுறம் வசந்தமண்டபமும் உள்ளன. இரண்டாம் கோபுர வாயிலேக் கடந்தவுடன் முதற்பிராகாரத்தை அடையலாம். வாயிலில் விநாயகர் கொடிமரம் இரட்டைநந்தி பலிபீடங்கள் உள்ளன. தென் புறம் அறுபத்துமூவர் மற்றும் தொகையடியார் ஒன்பதின்மர் உள்ள னர். அதையடுத்துச் சந்தானுசாரியர் சமயாசாரியர்கள் விளங்குகின் றனர். நிருதிமூலேயில் விநாயகர். மேற்கே சுவாமி கோயிலுக்கும் அம்பிகைகோயிலுக்கும்நடுவில் சோமாஸ்கந்த அமைப்பில் அறுமுகக் கடவுள் கோயிலும், அதை அடுத்து மகாலட்சுமிகோயிலும் உள்ளன. வடக்கே சண்டீசர் கோயில் உள்ளது. கர்ப்பக்கிருகக்கோஷ்டங்களில்

தென்புறம் விநாயகர் தட்சிணாமூர்த்தியும், மேற்கே அர்த்தநாரீசுவரரும், வடக்கே பிரமன் துர்க்கை ஆகியோரும் உள்ளனர். தலவிருக்ஷமாகிய முல்லை வடக்குப் பிராகாரத்தில் உள்ளது. ஈசானதிசையில் யாகசாலையும் அதையடுத்து குதிரை பூட்டிய இரதவடிவில் சபா மண்டபமும் உள்ளன. இம்மண்டபத்தில் நித்துருவர், கார்க்கியர், சங்குகர்ணன் பூசித்த சிவலிங்கங்கள் உள்ளன.

வலம்வந்து திருவாயிலில் உள்ள விநாயகரை வணங்கி திருக்கோயிலுக்குள் நுழைகிறோம். மகாமண்டபத்தில் ஆகமவிதிப்படி அமைந்த நவக்கிரகங்களும் நடராஜசபையும் உள்ளன. திருக்கோயிலின் வலப்புறம் சோமாஸ்கந்த மண்டபம் தனியே உள்ளது. தலத் திருப்பதிகக் கல்வெட்டுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. கற்பகவிநாயகரை வணங்கி அர்த்தமண்டபத்தின் உள்ளேசென்றால் பஞ்சமூர்த்திகள் விளங்குகின்றனர். துவாரபாலகர் வாயிலைக் காத்துநிற்க ஸ்ரீ முல்லைவனநாதர் கர்ப்பக்கிருகத்தில் வீற்றிருந்து அருள்வழங்குகின்றார். பிருதுவியாலான உயரமானபாணத்தோடும் முல்லைக்கொடி சுற்றிய வடுவோடும் இறைவன் திகழ்கிறார். ஆவுடையாருக்குத்தான் அபிடேகங்கள் நிகழ்கின்றன. தரிசித்துக்கொண்டு வெளியேவந்தால் முதற்பிராகாரத்தில் அம்பாள் சந்நிதிக்குப்போகும் வழியில் சத்திய கூபம் என்ற தீர்த்தமும், கௌதமேசுரர் கோயிலும் உள்ளன. எதிரே கிழக்குநோக்கிய நிலையில் தனிப்பிராகாரத்தோடு தனிக்கோயிலாக அம்பாள் கோயில் விளங்குகிறது. கருக்காத்தநாயகி நம்கருத்தைப் பிணிக்கும் அன்னையாகத்திகழ்ந்து அருள்பாலிக்கிறாள். தலவரலாற்று ஓவியம் நுழைவாயிலில் எழுதப்பெற்றுள்ளது.

திருக்கோயில் மிக்க தூய்மையோடு அறநிலையத்துறையினரால் பரிபாலிக்கப்படுகிறது. உள்ளூர் அன்பர்களின் முயற்சியால் திருப்பணி மகாகும்பாபிஷேகங்கள் நிகழ்த்தப்பெற்று, பொலிவோடும் தெய்வீக வசீகரத்தோடும் திகழ்கிறது திருக்கோயில்.

**மூர்த்திகள் :**

இறைவன் திருப்பெயர் : அருள்மிகு முல்லைவனநாதர். மாதவி வனேசுவரர், கர்ப்பபுரீசுவரர் எனவும் வழங்கப்படுகிறார். இறைவி' திருப்பெயர் : அருள்மிகு கரும்பணையாளம்மை, கர்ப்பரக்ஷாம்பிகை எனவும் வழங்கப்படுகிறார். கருக்காக்கும் நாயகி எனவும் பெயர் வழங்குகிறது.

**தீர்த்தம் :**

பிரமதீர்த்தம், க்ஷீரகுண்டம், சத்தியகூபம், விருத்தகாவிரி ஆகியனவாகும்.

**தலவிருட்சம் :** முல்லை.

**புராண வரலாறுகள் :**

**பிரமன் :** பிரமதேவருக்கு நான் என்று கருதும் ஆணவம் ஏற்பட்டது. அதனால் படைத்தல் தொழில் கைகூடப்பெறுமற் போயிற்று. இத்தலத்தில் பிரமன் தன்பெயரால் தீர்த்தம் அமைத்து நீராடி முல்லைவனநாதரை வழிபட்டு மீண்டும் படைத்தல் தொழில் கைவரப்பெற்றுச் சத்தியலோகத்தை அடைந்தான்.

**கார்க்கியர் :** அந்தணர்தந்த அடைக்கலப்பொருளை மோசஞ் செய்ததால் இருபத்தோருயுகங்களாகப் பேய்வடிவத்துடன் திரிந்த சுவர்ணுதரன் என்னும் வைசியனைக் கங்கை முதலிய தீர்த்தங்கள் ஆட்டுவித்து முடிவில் இத்தலத்தில் பிரமதீர்த்தத்தில் நீராட்டுவித்து தேவலோகம் அடைவித்தவர் இம்முனிவர். இம்முனிவரே இத்திருக் கோயில் திருப்பணிகள் பலவற்றைச் செய்தவராவர்.

**கௌதமர் :** சப்தரிஷிகளில் ஒருவர். பஞ்சகாலத்தில் முனிவர்கள் பலருக்கு அன்னமளித்துக் காத்தவர். முனிவர்கள் காசிபருக்குப் பழி யுண்டாகுமாறு அவர் வளர்த்த பயிரில் பசு ஒன்றை மேயச்செய் தனர். காசிபர் தர்ப்பையால் அப்பசுவை வெருட்டினர். மாயப்பசு இறந்தது. கோஹத்தி முனிவரைப்பற்றியது. காசிப முனிவர் இத் தலத்தில் சிவலிங்கம் தாபித்து வழிபட்டுப் பசுவதைதோஷம் நீங்கப் பெற்றார்.

**குஜத்துவசன் :** இமயமலையின் வடபாலுள்ள வனத்தில் வேட்டையாடவந்தான் குஜத்துவசன் என்ற அரசன். வேட்டையாடு வதால் இவ்வனத்தில் தவம் செய்யும் முனிவர்களுக்கு இடையூறுரும் என்றகூறித் தடுத்தார் சத்தியமுனிவர். முனிவர் சொல்லியதையும் கேளாது வேட்டையாடி அவர் தம்சாபத்திற்குஇலக்காகிப் புலியானுன் மன்னன். பல்லாண்டுகள் அலைந்துதிரிந்து திருக்கருகாவூரையடைந்து கார்த்திகைஞாயிறில் நீராடி இறைவனை வழிபட்டு உண்மை உருவம் பெற்றுத் தன்னகரை அடைந்தான்.

**சங்குகர்ணன் :** வேதநிதி என்ற குருவின் மகளை மணம்புரிந்து கொள்ள மறுத்த சங்குகர்ணன், குருவின் சாபத்தினுல் பேயுருவ மானுன். பல்லாண்டுகள் அலைந்து திரிந்து முடிவில் இத்தலத்தை அடைந்து சாபநிவிர்த்திபெற்றுன்.

**நித்துருவர் :** (கருக்காத்தநாயகி பெயர்க்காரண வரலாறு) நித்துருவர் என்ற முனிவர் வேதிகை என்றபெண்ணோடு இத்தலத்தில் இல்லறம் நடத்திவந்தார். முனிவர் வேள்விசெய்ய வெளியூர்சென்

திருந்தபோது ஊர்த்துவபாதமுனிவர் நித்துருவர் ஆஸ்ரமத்துக்கு வந்தார். வேதிகை நிறைகருவுற்றிருந்ததால் எழுந்துவந்து பிச்சையிட இயலாதிருந்தாள். ஊர்த்துவபாதர் சினமுற்று வேதிகை இராசயச்சு என்ற நோயடையுமாறு சாபமிட்டார். அச்சாபத்தின் வலிமையால் கரு நழுவிக் கீழேவிழுந்தது. மயங்கி வருந்திய வேதிகை முல்லைவன நாதரைப் பிரார்த்தித்தாள். இறைவன் இறைவியின் அமுதகும்பத்தில் அக்கருவை நிறையச்செய்து, காமதேனுவைக் குழந்தையைப்பேணி வருமாறு செய்தார்; வேதிகை ஓராண்டுக்காலம் பிரமதீர்த்தத்தில் நீராடி செங்கழுநீர்ப்பூவால் தம்மை வழிபடின் சாபம் நீங்கும் என்று கூறினர். நித்துருவர் இத்தலத்தில் வாழ்வோர் கர்ப்பவேதனை ஏற்படாமலிருக்க இறைவியை வேண்டி வரம்பெற்றுர். அதுமுதல் இத்தலத்தில் வழிபடுவோர்க்குக் கர்ப்பச்சிதைவு ஏற்படுவதில்லை. அம்பிகை கருக்காத்தநாயகி என்னும் பெயரைப்பெற்றுள்.

பீமசேனன், புண்ணியத்துவசன், சந்திரன் முதலானோர் இத் தலத்தை வழிபட்டு அருள்பெற்றுள்ளனர்.

**தலப்பாடல்கள் :**

ஞானசம்பந்தர் அப்பர் பாடிய திருப்பதிகங்கள் இரண்டு இத் தலத்திற்கு உள்ளன. மற்றும் தலபுராணம், பதிற்றுப்பத்தந்தாதி, இரட்டைமணிமாலை, நான்மணிமாலை முதலியபிரபந்தங்கள் உள்ளன. அப்பர் பாவநாசம், திருவீழிமிழலை, க்ஷேத்திரக்கோவைத் திருப்பதி கங்களிலும் சுந்தரர் ஊர்த்தொகைத் திருப்பதிகத்திலும் இத்தலப் பெயரைக் குறிப்பிட்டுள்ளார்.

**கல்வெட்டுக்கள் :**

இக்கோயில் கல்வெட்டுக்களில், மதுரைகொண்ட கோப்பரகேசரி வர்மரின் கல்வெட்டு, இவ்வூரை, வடகரை பாம்பூர்நாட்டுத் தேவதா னம் திருக்குடமூக்கில் பால் கருகாவூர் என்றும், முதலாம் இராசராச சோழனின் கல்வெட்டு நித்த விநோதவளநாட்டு ஆவூர்க்கூற்றத்துத் திருக்கருகாவூர் என்றும் குறிப்பிடுகின்றன. குடமூக்கு என்பது கும்பகோணமாகும். அதன்பால் இக்கருகாவூர் இருப்பதாக மதுரை கொண்ட கோப்பரகேசரிவர்மன் கல்வெட்டுக் கூறுவதால் அக்காலம் சிறப்புடைய ஊரைச்சொல்லி அதன்பக்கத்தில் இருக்கும் ஊரைக் குறிப்பிடுவது மரபு என்று தெரிகின்றது. " ஒருநொந்தாவிளக்கினுக்கு நந்திபுரத்த வியாபாரி சாமுண்டன்மூர்த்தி கருகாவூர் நிலம் நான் விலைகொண்ட நிலம் இவ்வூர் உட்பலாற்றின்வடவாய் ஒரு முக்காணி யும் என்ற இக்கோயிலிலுள்ள மதுரைகொண்டகோப்பரகேசரிவர்மரின் கல்வெட்டுப்பகுதியால், அக்காலம் இவ்வூர்க்கு அருகில் ஓடிய ஆறு

உட்பலாறு (உப்பனாறு) என்னும் பெயருடன் விளங்கிற்று என்பது புலனாகிறது. (இக்காலம் ஓடும் ஆறு வெட்டாறாகும்.) இக்கல்வெட்டுப் பகுதியில் குறிக்கப்பெற்ற நந்திபுரம் என்பது திருப்பட்டீச்சுரத்துக்கு அண்மையில் உள்ள இராமநாதன் கோயிலாகும்.

இத்திருக்கருகாவூர்க்கோயில் கல்வெட்டுக்கள் அனைத்தும் இறைவர்க்குத் திருவமுதுக்கும், திருநுந்தாவிளக்கினுக்கும் நிலம்விட்ட செய்திகளைக் குறிப்பிடுகின்றன. இவ்வூரில் சபை ஒன்று இருந்தது. அதற்குக் கருகாவூர்ச்சபை என்று பெயர். இக்கோயில் கல்வெட்டுக்களில் காணப்பெறும் காப்புரைகள் "இதுரக்ஷித்தார் ஸ்ரீபாதம்என்றலைமேல். இவைபன்மாகேஸ்வர பெருமக்களும் ரக்ஷை" "ரக்ஷிப்பார் இவ்வூர் ஆயிரந்திருவடியுமிவர்கள் ஸ்ரீ பாதத்தூளி என்றலைமேலன" என்பனவாகும்.

## திருப்பாலைத்துறை

இத்தலம் கும்பகோணத்திலிருந்து தஞ்சைசெல்லுகின்ற இருப்புப் பாதையில் பாபநாசம் நிலையத்திலிருந்து வடகிழக்கே 1 கி. மீட்டர் தூரத்தில் குடமுருட்டியாற்றின் கரையிலுள்ளது. கும்பகோணத்திலிருந்து தஞ்சை செல்லும் பேருந்தில் சென்றால் கோயிலின் வாயிலில் இறங்கலாம். காவிரித் தென்கரைத்தலங்களில் இத்தலம் 19-வதாக விளங்குவது. அப்பர் சுவாமிகள் பாடிய தேவாரத் திருப்பதிகத்தைப் பெற்றது. இக்கோயில் பாவநாசம் நூற்றெட்டுச் சிவலிங்கக் கோயிலோடு இணைக்கப்பெற்று இந்து சமய அறநிலையத்துறை பரிபாலனத்திலுள்ளது.

**தலப்பெருமை :**

பன்னிரு திருமுறையுள் தேவாரம் வேதம் போல விளங்குவது. வேதம் திரயி (மூன்று) என மூன்றாக வழங்கப்படுதல்போலத் தேவாரமும் மூவரால் பாடப்பெற்றுள்ளன. வேதத்தின் நடுவில் விளங்குவது யசுர் வேதம். மூவர் தேவாரத்தின் நடுவில் திகழ்வது அப்பர் பாடிய தேவாரம். யசுர் வேதத்தின் நடுவில் பஞ்சாக்ஷரம் விளங்குதல்போல அப்பர் பாடிய திருமுறையின் நடுவில் பஞ்சாக்ஷரம் வைக்கப்பெற்றுள்ளது. அப்பர் பாடிய திருமுறை மூன்றனுள் நடுவில் விளங்குவது திருக்குறுந்தொகை. இத்திருமுறையில் விளங்கும் பதிகங்கள் 101. இதன் நடுப்பதிகமாகிய 51வதுபதிகம் திருப்பாலைத் துறைப் பதிகமாகும். அப்பர்பாடிய பதிகங்கள் பெரும்பாலும் 10பாடல்களை உடையன. இப்பதிகம் 11 பாடல்களைக்கொண்டது. இப்பதிகத்தின் நடுநாயகமாக விளங்கும் பாடலில் அப்பர் சுவாமிகள் சூக்கும பஞ்சாக்ஷரத்தை அமைத்துப்பாடியுள்ளார். இவ்வமைப்பு திருவருளால் ஏற்பட்டதாகும். இத்தகைய பெருமைவாய்ந்த திருப்பதிகம்

இத்தலத்திற்குரியதாய்த் திகழ்வதொன்றே, இத்தலச் சிறப்பை விளக்கிடப்போதியதாகும்.

குடமுருட்டியாற்றின் கரையில் பனை மரத்தைத் தலமரமாகக் கொண்டுள்ளதால் இத்தலம் பாலைத்துறை என வழங்கப்பெற்றது. தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய புலியின்தோலைச் சிவபெருமான் உரித்து அதனை அணிந்துகொண்டதலம்.

**கோயில் அமைப்பு:**

பேருந்துச்சாலையை அடுத்துக் கிழக்குநோக்கி அமைந்துள்ளது கோயில். கோயிலுக்குமுன்புறம் தென்புறத்தில் திருக்குளம் உள்ளது. பழமையானகோயில். ஐந்து நிலைக்கோபுரத்தை அடுத்து வெளிப்பிரா காரம் உள்ளது. கோபுரவாயிலுக்கு அருகில் கோயிலுக்குவேண்டிய நெல்லைச் சேகரித்துவைக்கும் நெற்கூடு ஒன்றுள்ளது. 11,000 கலம் நெல்கொள்ளக்கூடியதாய் செங்கல்லால் கட்டப்பெற்ற இந்நெற்கூடு பார்க்கத்தக்கது. ஒருகாலத்தில் இவ்வளவுபெரிய வருவாயுடையதாய் கோயில் விளங்கியது என்பதை இது நமக்குத்தெரிவிக்கிறது. இன்று அது உபயோகத்தில் இல்லை. வடகிழக்குமூலையில் இடிந்த யாகசாலையும் தென்கிழக்குமூலையில் திருமடைப்பள்ளியும் உள்ளன.

இத்திருத்தலத்தில் சுவாமி அம்பாள் கல்யாண கோலத்தில் விளங்குவதால் இருவரும் கிழக்குநோக்கி உள்ளனர். அம்பாள் வலப் பாகம் விளங்குகின்றார். வெளிப்பிராகாரத்தில் தனிப்பிராகாரத்துடன் அம்பாள் கோயில் உள்ளது. வெளிப்பிராகாரம் வலம்வரும் நிலையில் இல்லை. இரண்டாவது கோபுரம் 3 நிலைகளை உடையது. முன்னால் நந்தி பலிபீடமும், அதன்வடபால் இடிபாடுடைய வசந்தமண்டபமும் உள்ளன. கோபுரவாயிலில் விநாயகர் விளங்குகின்றார். தரிசித்து உள்ளேசென்றால் மகாமண்டபம் திகழ்கின்றது. இம்மண்டபத்தின் வடபால் தெற்குநோக்கி நடராசர் விளங்குகின்றார். எதிரே தென்பால் சமயாசாரியர் நால்வர் விளங்குகின்றனர். மேலைப்பிராகாரத்தில் மிக அழகிய கருங்கல் மண்டபம் உள்ளது. விநாயகர் சோமாஸ்கந்தர் முருகன் வசிஷ்டலிங்கம் மகாலக்ஷ்மி முதலிய மூர்த்திகள் விளங்கும் மண்டபங்கள் உள்ளன.

வடக்குப்பிராகாரத்தில் அறுபான்மும்மை நாயன்மார்கள் எழுந் தருளியுள்ளனர். உருவங்களின் அடிப்பீடத்தில் நாயனார் பெயர் எழுதப்பெற்றுள்ளது. அறுபத்துமூன்று நாயன்மார்களில் சிலர் திரு வுருவங்கள் இல்லை. கர்ப்பக்கிருகக்கோஷ்டங்களில் நர்த்தனவிநாயகர், ஊர்த்துவதாண்டவர், தட்சிணாமூர்த்தி ஆகியோரும், மேற்கே இலிங் கோற்பவர் இடத்தில் அர்த்தநாரீசுரரும் உள்ளனர். வடக்குப்பிரா காரத்தில் பிர்மா, துர்க்கை, சண்டேசுரர் ஆகியோர் உள்ளனர். வலம்

வந்து அர்த்தமண்டபத்தை அடையலாம். இருபுறமும் இரண்டு காவலர்கள் காவல்புரியப் பாலைவனநாதர் விளங்குகின்றார். தரிசித்து வெளிப்பிராகாரத்திற்குவந்து அம்பாள்கோயிலை அடைந்துவழிபடலாம்.

**மூர்த்திகள் :**

இறைவன் திருப்பெயர் அருள்மிகு பாலைவனநாதர். இறைவி திருப்பெயர் அருள்மிகு தவளவெண்ணகையாள். வெண்மையான பற்களை உடையவள் என்பது இப்பெயரின்பொருள். ஊர்மக்கள் தவளாம்பாள் என வழங்குகின்றனர்.

**தீர்த்தங்கள் :**

வசிட்ட தீர்த்தம், இந்திர தீர்த்தம், இயம தீர்த்தம், காவிரி முதலியனவாகும்.

**தலமரம் :**

பாலை. தலமரம் கோயிலில் இல்லை.

திருநல்லூரைச்சேர்ந்த ஏழு சப்தஸ்தானங்களில் இத்திருத்தலம் ஒன்றாகக் கூறப்படுகிறது.

**வழிபட்டோர் :**

திருமால், பிரமன், அஷ்டதிக்குப்பாலகர்முதலியோர் இத்தலத்தை வழிபட்டுள்ளனர். திருஞானசம்பந்தர் பதிகம் கிடைக்கவில்லை. அவர் இத்தலத்தை வழிபட்டுச் சென்றுள்ளார்.

**அருகில் உள்ள தலம் :**

திருப்பாலைத்துறைக்கு அருகில் பாவநாசத்தில் விளங்கும் நூற்றெட்டுச் சிவலிங்கக்கோயில் தரிசிக்கத்தக்கது. இத்தலம் கீழை ராமேச்சுவரம் என வழங்கப்பெறுவது. கரன் தூஷணன் என்ற அரக்கர்களைக்கொன்ற பாவம்தீர இராமர் இத்தலத்தில் 108 சிவலிங்கங்களைப் பிரதிட்டைசெய்து வழிபட்டுள்ளார். தனிமண்டபத்தில் ஆவுடையாரோடு விளங்கும் சிவலிங்கங்கள் வரிசை வரிசையாக அமைந்துள்ளன. இராமர் சிவபிரானை வழிபட்டுத் தான்செய்த கொலைப்பாவத்தைப் போக்கிக்கொண்ட காரணத்தால் இத்தலம் பாவநாசம் எனப்பெற்றது.

திருநல்லூர், திருக்கருகாவூர், திருச்சக்கரப்பள்ளி முதலியன இத்தலத்தைச் சூழவுள்ள தலங்களாகும்.

**புராண வரலாறுகள் :**

பாண்டவர்கள் வனவாசகாலத்தில் தௌமிய முனிவரின் ஆலோசனைப்படி அருச்சுனன் இத்தலத்து இறைவனை வழிபட்டு வில் வித்தையின் நுணுக்கங்களை உணர்ந்து பாதாள உலகம் சென்று அங்கு உலூபி என்ற அரசிளங்குமரியை மணந்து திரும்பினான்.

தாருகாவனத்து முனிவர்கள் சிவபெருமானைப் புறக்கணித்து அவரையே அழித்தற்பொருட்டுத் தீய வேள்விசெய்து புலியை உண்டாக்கிச் சிவபிரான்மீது ஏவினர். பெருமான் இத்தலத்தில் அப் புலியின்தோலை உரித்து உடுத்திக்கொண்டார்.

கிருதயுகத்தில் பண்டாசுரனின் கொடுமையைத் தாங்கமுடியாமல் தேவர்கள் இத்தலத்தில் பெருவேள்விசெய்தனர். அம்மை தோன்றி அவ்வரக்கனை அழித்தாள். தேவர்கள் செய்த வேள்வித்தீயின் வெப் பத்தை இறைவன் கங்கைநீரால் அவித்தான். வேள்விக்குண்டம் தீர்த்தமாயிற்று. பல முனிவர்கள் இத்தலத்தில் வசித்ததால் பிரும்ம வனம் என்னும் பெயர் உண்டாயிற்று.

திரேதாயுகத்தில் வசிட்டர் பிர்மபட்டம் அடையக் காவிரி மணலால் இத்தலத்தில் அரசமரத்தடியில் சிவலிங்கம் தாபித்து வழி பட்டார்; பிர்மரிஷி பட்டம் பெற்றார். விசுவகர்மாவின் உதவியால் அம்மையின் திருவுருவை அருகில் அமைத்துப் பூசித்தார். அம்பிகை மகிழ்ந்த முகத்தோடு விளங்கினாள். அவள் புன்னகை நிலவொளியை வழங்கிற்று. அதனால் அனைவரும் அம்பிகையைத் தவளவெண்ணகை யாள் என்று அழைத்தனர். வசிட்டர் அரசமரத்தினடியில் இறைவனை வழிபட்டதால் அரசவனம் என இத்தலம் பெயர்பெற்றது. அவர் உண்டாக்கிய தீர்த்தம் வசிட்ட தீர்த்தம் எனப்பெற்றது.

துவாபரயுகத்தில் இத்தலம் புன்னாகவனம் எனப் பெயர்பெற்றது. வசிட்டர் முதலிய முனிவர்களும் தேவர்களும் இத்தலத்தை வழிபட் டுள்ளனர்.

மலயத்துவசபாண்டியன் காலவமுனிவரை அவமதித்ததால் கரடியாகி அகத்திய முனிவரின் கட்டளைப்படி இத்தலத்திற்குவந்து காவிரியில்நீராடி உண்மை உருவம்பெற்று, பெருமானுக்குத் திருமண விழா நடத்தி மகிழ்ந்து மதுரைசென்றான்.

**தலப்பாடல் :**

திருநாவுக்கரசர் அருளிய திருக்குறுந்தொகைப் பதிகம் ஒன்று உள்ளது. அடைவுதிருத்தாண்டகத்திலும் இத்தலப் பெயர் குறிக்கப் பெற்றுள்ள ஒருபாடல் உள்ளது. திருவாசகம் கீர்த்தித் திருவகவலில்,

" அந்தரத் திழிந்து வந்து அழகமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும் "

எனக் கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டுக்கள் :**

இக்கோயிலில் பதினொரு கல்வெட்டுக்கள் உள்ளன. முதற் குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாம்இராசராசன், மூன்றும் இராசராசன், மூன்றும் குலோத்துங்கன் இவர்கள் காலத்துக் கல்வெட்டுக்கள் உள்ளன.

இக்கல்வெட்டுக்களில் இவ்வூர் நித்தவிநோத வளநாட்டு நல்லூர் நாட்டினைச்சேர்ந்த ஊர் எனவும் இறைவன் திருப்பாலைத்துறை மகாதேவர் எனவும் குறிக்கப்பட்டுள்ளது. இக்கோயிலின் கீழைத்திருச் சுற்றுமாளிகையில் நீலகங்கரையன் என்ற அரசியல் அதிகாரி ஒருவன் திருஞானசம்பந்தேச்சுரமுடையார் என்ற கடவுளை எழுந்தருளுவித்து அக்கடவுள் வழிபாட்டுக்குத் திருச்சிற்றம்பலநல்லூர், இராசகம்பீர நல்லூர் இவற்றில் நிலங்கள் அளித்துள்ள செய்தி கூறப்பட்டுள்ளது.

முதற்குலோத்துங்கன்காலத்தில்தான் இக்கோயில் கருங்கற் திருப்பணியாக்கப்பெற்றிருக்கவேண்டும் எனத்தெரிகின்றது. இரண்டாம் இராசராசன் கி. பி. 1158 இல் இவ்வூர் இறைவருக்குக் குஞ்சிரம் என்ற ஊரை இராசகம்பீரநல்லூர் என்றபெயருடன் நாள்வழிபாட்டுக்காக அளித்துள்ள செய்தி கல்வெட்டொன்றில் காணப்படுகிறது.

மூன்றும் குலோத்துங்கன் காலத்தில் பெண்ணுகடம் உடையான் செல்வன் பெரியதேவன்நம்பி என்பவன் திருப்பாலைத்துறை கோயிலில் பெரியதேவர்நாச்சியார் திருவுருவங்களை எழுந்தருளுவித்து அதற்கு அணிகலன்கள் கொடுத்துள்ளான்.

ஒரு கல்வெட்டில் வேம்பிக்குடி காவேரிவல்லவனுல் திருப்பாலைத் துறைப் பெருமானுக்கு நிலம் அளிக்கப்பட்டசெய்தி கூறப்படுகிறது. மற்றும் பாண்டியமன்னர்கள், விசயநகரவேந்தர்கள் காலங்களில் இக் கோயில் திருப்பணிசெய்யப்பெற்றுள்ளதாகத்தெரிகிறது.

**திருப்பணி :**

திருப்பாலைத்துறைத் திருக்கோயிலை அண்மைக்காலத்தில் தருமையாதீன சமயப் பிரசாரகர், திருக்கருகாவூர், தொண்டர். திரு. கோ. சிவஞானம் அவர்கள் அன்பர்கள்பலரின் ஆதரவுடன் திருப்பணிகள் செய்து திருப்பதிகக்கல்வெட்டுநிறுவி 9—6—57 அன்று அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் செய்வித்துள்ளார். வெளிப்பிராகாரம், இராச கோபுரம், மற்றும் கோயில் பகுதிகள் பலவும் மீண்டும் திருப்பணி செய்யப்படவேண்டிய நிலையில் உள்ளன.

---

# இறைவா! உன் ஆலயத்தில்....

தினமலர் நிருபர்

சொத்துள்ள கோயில்களின் அவலநிலே நீண்டதொடர் கதையாக இருக்கிறது. எனவே இவைகளைச் சுட்டிக்காட்டி அரசின் கவனத்திற்குக் கொண்டுசெல்லும் தினமலரின் பணியும் தொடர்கிறது.

இப்போதுள்ள சட்டங்களினுலும், நடைமுறைகளினுலும் ஒளி இழந்து இருண்டுகிடக்கும் பல பெரிய இந்து ஆலயங்களைப் பார்த்தோம். வருமானம் இல்லாமற்போய்விட்ட காரணமாக அந்தக் கோயில் இருக்கின்ற கிராமமே ஒளி இழந்து இருளில் நிற்கின்ற அவலத்தை இந்தக் கட்டுரை விவரிக்கிறது.

திருச்சி அருகே காவிரியின் வடகரையில் தேவாரப் பாடல்பெற்ற 63 சிவஸ்தலங்களில் ஒன்ருன திருப்பைஞ்ஞீலி நீலகண்டேசுவரர் ஆலயம் புராதனப் பெருமைகளைக்கொண்டதாகும். அந்தப் பெருமைகளில் இப்போது எஞ்சிநிற்பது சுவரில் பதித்துள்ள வெறும் கல்வெட்டுக்கள்தாம். புதர்கள்மண்டிக்கிடக்கும் பிராகாரத்தையும் (நந்தவனம்) பல இடங்களில் இடிந்து கிடக்கின்ற மதில் சுவர்களையும், பாழடைந்துகிடக்கின்ற தீர்த்தங்களையும், மழையிலும் வெயிலிலும் நனைந்து கவனிப்பாரற்றுக்கிடக்கும் கலே வேலைப்பாடமைந்த அழகிய தேரின் சிதைந்த தோற்றத்தையும் பார்க்கும்போது தமிழ்நாட்டின் ஒப்புயர்வற்ற கலைச்செல்வங்கள் இப்படி நம் கண் எதிரில் அழிந்துகொண்டிருக்கின்றதே என வேதனைப்படுவதைத்தவிர வேறு வழி எதுவும் தெரியவில்லை.

இந்தக்கோயிலின் சொத்து எவ்வளவு தெரியுமா ? காலப்போக்கில் என்னவாயிற்று என்றே தெரியாமல்போன நிலங்கள் தவிர, இன்று எஞ்சியுள்ளதாக ரெக்கார்டுகளில் இருப்பது 597 ஏக்கர் நிலம். கோபுரத் திருப்பணிகளுக்கு நிலம் விடப்பட்ட செய்திகள் கோபுர வாயிலில் உள்ள கல்வெட்டில் இருக்கிறது. ஆனுல் அதில் குறிப்பிட்டுள்ள நிலங்கள் எங்கே இருக்கிறது என்பது இறைவனுக்குத்தான் தெரியும். இந்தக்கோயிலின் நித்திய பூசைகளே சரிவர நடைபெற முடியாத நிலேதான் இப்போது இருக்கிறது.

பூசைக்குச் சமைப்பதற்குத் தேவையான நெல்கூட வருமானம் இல்லாமல் போனதால், இந்தக்கோயிலின் குருக்கள் ஒருவர் தன்னுடைய வீட்டிற்குச் சமைத்த உணவை இங்கே கோயிலில்கொண்டு வந்து வைத்து, மணியடித்து பூசைசெய்துவிட்டு வீட்டிற்கு எடுத்துச் செல்லுகிற நிலைமை ஓராண்டுக்குமுன்பு இருந்துவந்தது என்னும் செய்தி எவ்வளவு வேதனையை ஏற்படுத்துகிறது.

கோயிலுக்குச் சொந்தமான பட்டுப்போன மரங்களை ஏலம்விட்டு அதில் கிடைத்த வருமானத்தைக்கொண்டு கோவிலின் நிர்வாக அதிகாரி சம்பளம் பெறவேண்டியிருந்ததாகவும் கேள்விப்படுகிறோம். 1½ ஆண்டுகளாகச் சம்பளம்வாங்காத கோயில் சிப்பந்திகள் இருக்கிறார்கள். அவர்களின் சாப்பாட்டுக்கே வழியில்லாதபோது அவர்கள் கோயிலை எப்படிக்கவனிக்கமுடியும்? ஆனால் கோயிலைப்பற்றிக் கவலைப் படாமல் யார்யாரோ கோயில்நிலங்களைவைத்து வசதியாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கின்றார்கள்.

அவலக் காட்சிகளைச் சொல்லுவதோடு இந்த ஆலயத்தின் சில சிறப்புக்களையும் சொல்லியாகவேண்டும். ஸ்ரீரங்கம் கோயிலைப்போல் முன்பகுதியில் முடிவுபெறாத ராயகோபுரம். ஆலயத்தின் பரப்பளவோ 1, 70, 800 சதுர அடிகள். ஆலயத்திற்கு வெளியே விநாயகர் இருக்கும் வசந்தமண்டபம். மூன்றாம் பிராகாரத்தில் இருக்கும் நூற்றுக் கால் மண்டபம். நடுவில் உள்ள நாலுகால் மண்டபம். இரண்டாம் பிராகாரத்தில் உள்ள சுற்றுப்பிராகார மண்டபம். ஸ்தலவிருட்சமான நீலி என்னும் அபூர்வமான வாழைமரங்கள் (தண்ணீர் ஊற்றாமலேயே வளர்ந்துவரும் இந்தவாழையைக் கல்வாழை என்று அழைக்கிறார்கள். இந்தக்கல்வாழை மரத்தைக் குழந்தை இல்லாதவர்கள் சுற்றிவருகிறார்கள்) நிலமட்டத்திற்குக் கீழே பாறையில் அமைந்துள்ள பல்லவர் கால கோயிலமைப்பைக்கொண்ட எமன்கோயில். கோபுரவாயிலுக்கு உள்ளே இருக்கும் மகாமண்டபம். இவற்றோடு ஐந்துபிராகாரங்கள் கொண்ட அழகியகோயில்.

தமிழகத்தின் எந்தக்கோயிலிலும் காணமுடியாத ஒரு புதுமையும் இந்தக்கோயிலில் இருக்கிறது. திருப்பைஞ்ஞீலி கோயிலின் சுற்றுப் பிராகாரமதில்கள், மேல் தளங்கள் ஆகியன புலித்தோலில் உள்ள வரிகள்போன்று வண்ணக் கருங்கற்களால் கட்டப்பட்டுள்ளன. புலி வரிக் கற்களால் கோயில் அமைத்துள்ளதற்கு ஒரு புராண வரலாறும் இருக்கிறது.

இந்த இடம் வனமாக இருந்தகாலத்தில் வியாக்கிரசூரன் என்பவன் புலி உருவில்வந்து இறைவனை வழிபட்டான். வேடன் ஒருவன் அதனைப் புலி என்று கருதிக் கொன்றான். அந்தப்புலி இறப்பதற்கு

முன்னால் இறைவன்தோன்றி வேண்டிய வரத்தைக்கேள் என்றபோது இவ்வூர்கற்களில் என்வடிவம்இருக்கவேண்டும்என்றுபுலிவேண்டியது. அவ்வாறு வரம் கொடுத்ததின் விளைவாகவே இவ்வூர் எல்லைக்குள் மட்டும் இவ்வித புலிவரிகற்கள் காணப்படுகின்றன என்று புராணம் கூறுகிறது.

மதுரையை ஆண்ட கலியுக ராமபாண்டியன் இங்குள்ள இறைவனை வேண்டியதால் வெண்குஷ்ட நோய் நீங்கப்பெற்று, கோபுரம் திருமதில் ஆகியவற்றைக்கட்டுவித்து, சிவகதி அடைந்தான் என்றும், யமனுக்கு இறைவன் இங்கே அருள்செய்தான் என்றும், அம்பிகை தவம் செய்து இறைவனைக்கண்டாள் என்றும் பலவிதமான வரலாறுகள் கூறப்படுகின்றன.

நீலிவனம் என்னும் காட்டில் மேய்ந்துகொண்டிருந்த பசுக்கள் ஓரிடத்தில்மட்டும் தம்மை அறியாமலேயே பாலைச் சொரிந்தன. கறக்காமலேயே பசுவின் மடியில் பால் குறைந்ததைக்கண்ட மக்கள் மாடுகளின்மடியிலிருந்து தானாகப் பால்சிந்துகின்ற இடத்தைக்கண்டு பிடித்து அங்கிருந்த புதரை அழித்துப்பார்த்தபோது ஒரு சிவலிங்கம் வெளிப்பட்டது. அதுவே வழிபாட்டுக்கு உரிய பைஞ்ஞீலிநாதர் கோயிலாகப் பின்னர் வடிவம் பெற்றது என்பதுதான் பூர்வக்கதை.

ராஜேந்திரசோழன், ராஜாதிராஜன், ராஜராஜதேவன் ஆகிய சோழ மன்னர்கள் காலக் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. கோனேரின்மைகொண்டான் என்னும் சோழமன்னன் இங்கு எழுநிலைக் கோபுரத்தைக் கட்டத்தொடங்கினான் என்பதை எழிலும் கீர்த்தியுமிக்க எடுப்பான ராயகோபுரவாயில் கல்வெட்டு கூறுகிறது.

திருப்பைஞ்ஞீலி என்னும் சிறியகிராமத்தில் இவ்வளவுபிரமாண்டமானகோயில் இருக்கிறது என்பதை யாரும் நம்பமுடியாது. இவ்வளவு பெரிய கோயிலின் உயர்ந்த மதில்சுவர்கள் இடிந்து உருக்குலைந்து கொண்டிருக்கிறது. கோயிலின் தோற்றமே கொஞ்சம் கொஞ்சமாக சிதைந்துவருகிறது.

கோபுரவாயிலை ஒட்டியுள்ள அக்கினி தீர்த்தம் பாழடைந்து கிடக்கிறது. இதில் உள்ள தண்ணீரை மக்கள் அசுத்தப்படுத்தி வருகிறார்கள். இவைகளைச் செப்பனிடவேண்டுமென்று கவலைப்படுவது யார்? கோயிலில்மட்டும் ஏதோ பெயரளவுக்கு பூஜை நடைபெற்றுவருகிறது.

திருப்பைஞ்ஞீலி கோயிலின் ஆண்டு வருமானம் 22,000 ரூபாய். ஆனால் அதிலும் வசூலாகும் தொகை சுமார் 10,000

ரூபாய்தான். 597 ஏக்கர் நிலம் இருந்து என்ன பயன்? ஒரு ஏக்கர் கோயில் நிலத்திற்கு வருடக்குத்தகை 10 ரூபாய் அல்லது 15 ரூபாய் தான் வசூலிக்கப்படுகிறது. அதுவும் சரியாக வசூல் ஆவதில்லை. நல்ல விளைச்சல் உள்ள நிலங்களும் தோட்டங்களும்கூடப் புஞ்சைக் காடுகள் என்ற பெயரில் குறைந்த குத்தகைக்குத் தனிப்பட்டவர் களால் அனுபவிக்கப்பட்டு வருகின்றன. இந்தக் குறைந்த குத்தகை யுங் கூடச் சரியாக வந்துசேர வில்லை என்றாலும் கோயில் நிலங்களுக் குரிய கிஸ்தி, விவசாயவருமானவரி ஆகியவற்றையும் கோயில் நிர்வாகம்தான் கட்டியாக வேண்டும். இந்தக் கோயிலின் சிப்பந்தி ஒருவர் 5 ஏக்கர் மானிய நிலத்தை வருடம் 30 ரூபாய் குத்தகைக்கு இன்னொருவரிடம் விட்டிருப்பதைக் கேள்விப்பட்டோம்.

சுமார் 70 ஆண்டுகளுக்கு முன்பு இந்தக் கோயிலின் தர்மகர்த்தா வாக இருந்த அய்யம்பாளையம் மிராசுதாரர் ஒருவர் தன்னிடம் வேலை செய்து வந்த அரிஜன மக்களின் பெயருக்கு 42 ஏக்கர் கோயில் நிலத்தைக் குத்தகை உரிமையாக எழுதிக்கொடுத்ததாகவும், பின்னர் கொஞ்சகாலம் கழித்து உரிமையை அரிஜனங்களிடமிருந்து தன் பெயருக்கு மாற்றிக்கொண்டதாகவும் சிலபேர் சொன்னார்கள். சில சாதாரண ஏழைகள் கோயில் நிலத்தைக் குத்தகைக்கு உழுது பிழைக் கின்றார்கள். ஆனால் ஏராளமாகச் சொத்துள்ள பண்ணையார்களுக்குக் கூட கோயில்சொத்தின்மீது ஆசைவருகிறதே.

திருப்பைஞ்ஞீலி கோயில் நிலங்களுக்குச் செலுத்தவேண்டிய வாய்தா கிஸ்தி தொகையைக் கோயில்நிர்வாகத்தினால் செலுத்தமுடிய வில்லை. இதனால் இந்த வரிமூலம் பஞ்சாயத்துக்கு வருமானம் இல்லாமல் போய்விட்டதால் மின்சார இலாகாவிற்குப் பணம்கட்ட முடியாமல் தெரு விளக்குகள் எரியவில்லை. இது மட்டுமல்ல. இந்தப் பஞ்சாயத்துக்கு முக்கியமான வருவாய் நிலவரிதான். இந்தக் கிராமத் தைச் சுற்றி இருப்பதெல்லாம் கோயில் நிலங்கள்தான். கோயில் நிலங்களுக்கு வாய்தா கட்டினால்தானே பஞ்சாயத்துக்கு வருமானம் கிடைக்கும்? பஞ்சாயத்துக்கு வருமானம் இல்லாமல் போய்விட்ட தால் அபிவிருத்திவேலைகள் பலவும் தடைப்பட்டுப்போய் கிராமமே களையிழந்து பரிதாபமாக நிற்கிறது.

திருப்பைஞ்ஞீலி பஞ்சாயத்து வாரச் சந்தையை நடத்திக் கொள்ளும் உரிமை கோயிலுக்குஅளிக்கப்பட்டது. கோயில் வருமானம் இல்லாமல் சிரமப்படுகிறதே என்று அதற்கு இந்தச் சந்தையின் மூலம் கிடைக்கும் வருமானமாவது உபயோகப்படட்டும் என்று கருதிச் சந்தை பொறுப்பைக் கோயிலிடம் ஒப்படைத்தார்கள். சென்ற ஆண்டு ரூபாய் 8000 திற்குச் சந்தை ஏலம் போயிற்று. இந்தச் சந்தை வருமானத்திலிருந்து பஞ்சாயத்துக்குச் செலுத்தவேண்டிய

(வரி) 15 சதவிகிதம் பங்குத் தொகையையும் கோயில் நிர்வாகம் செலுத்தவில்லை. இச் சந்தையின் மூலம் பஞ்சாயத்துக்குக் கிடைத்து வந்த வருமானமும்போய், கிராம அபிவிருத்தி வேலைகளும் நின்று போய், கோயிலாவது நன்ருக இருக்கிறதா என்ருல் அதுவும் இல்லை.

கோயிலின் நிர்வாக அதிகாரியின்மீது குறை இல்லை. கோயில் நிலங்களுக்கு வரவேண்டிய குத்தகை சரியாக வந்தால்தானே வரி செலுத்த முடியும். கோயில் நிலங்களை வைத்துச் சாப்பிட்டுக்கொண்டிருப்போருக்குச் சட்டம் துணை நின்ருல் இந்த நிலைதானே ஏற்படும்.

திருப்பைஞ்ஞீலி கோயிலின் நிலைமை ஏதோ ஒருகிராமத்தின் பிரச்னை அல்ல தமிழ் நாட்டில் 50,000 -க்கும் அதிகமான இந்து ஆலயங்கள் இருக்கின்றன. அறநிலைய ஆட்சித்துறையின் பொறுப்பில் மட்டும் 16,390 கோயில்கள் உள்ளன. இந்தக் கோயில்களில் மொத்தம் 50,972 சிப்பந்திகள் பணிபுரிகிருர்கள். அறநிலையத்துறை எடுத்துக்கொண்டிருக்கும் 16,390 கோயில்களிலும்கூட 1,505 கோயில்களுக்குமட்டுமே நிர்வாக அதிகாரிகள் இருக்கின்ருர்கள். நிர்வாக அதிகாரிகளே இல்லாத 14,885 கோயில்கள் இருக்கின்றன.

இந்தப் புள்ளி விவரங்களின் அடிப்படையில் இந்து ஆலயங்களுக்கு உள்ள சொத்துக்களைக் கணக்கிட்டால் அவை பலகோடி ரூபாய் மதிப்புள்ளதாக இருக்கும். கோயில் சொத்துக்களில் இருந்து கிடைக்கும் வருமானத்தை முறைப்படுத்தி, கட்டாயமாக வசூல் செய்தால் அரசுக்கு ஆண்டுதோறும் கோடிக்கணக்கில் வருவாய் கிடைக்கும். கோயில் நடைமுறைகளை சீர்திருத்தி ஊழல்களை ஒழித்து நிர்வாகத்தை ஒழுங்குபடுத்திஞல் இப்போது இருக்கின்ற பல ஆயிரம் கோயில் சிப்பந்திகளின் வாழ்வு மலரும். லட்சக்கணக்கான இளைஞர்கள் புதிதாக வேலை வாய்ப்புப் பெறக்கூடிய திட்டங்களைச் செயல்படுத்தமுடியும்.

கோயில் நிலங்கள் அனைத்தையும் அரசாங்கமே தனது நேரடிப் பொறுப்பில் எடுத்துக்கொண்டு, ஊர்தோறும் ஏராளமான விவசாயப் பண்ணைகளை ஏற்படுத்தி, படித்த இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புத் தரமுடியும். இப்போதுள்ள குத்தகைதாரர்கள் விரும்பிஞல் அவர்களுக்கும் விவசாயப் பண்ணைகளில் வேலை தரலாம். கோயில் நிலங்களின் வருமானத்தைத் தனிப்பட்டவர்கள் கொள்ளையடிப்பதையும் குடும்பச் சொத்தாக வைத்து அனுபவிப்பதையும் உடனடியாகத் தடுத்து நிறுத்த அரசு கடுமையான சட்ட மாறுதல்களைச் செய்து விரைவாக நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டுமென்று மக்கள் விரும்புகிருர்கள்.

நன்றி! — தினமலர், 25—8—78.

4—10—1978 அன்று

# தமிழ்நாடு விவசாய உயர்மட்டக்குழு

தஞ்சை மாவட்டத்திற்கு வருகைதந்தபோது

தமிழ்நாடு மாநில ஆலய நிர்வாக அதிகாரிகள் சங்கத்தின் ஸ்தாபகர்

திரு. S. தங்கவேலுப் பிள்ளை கொடுத்த

# மெமோரண்டம்

*  *  *  *  *

**உழுபவனுக்கே நிலம் சொந்தம் என்ற கோரிக்கை:**

தனிப்பட்ட நபர்கள் ஏராளமான நிலங்களை வைத்துக்கொண்டு படாடோபமாக சுக வாழ்க்கையை அனுபவித்துக்கொண்டு யாவற்றையும் சுய நலனுக்கே பயன்படும் சொத்துக்களை உழுபவனுக்குச் சொந்தமாக்குவது நியாயமாகும். ஆனால் ஆலய நிலங்கள் மடத்து நிலங்கள் இதர தர்ம நிலங்கள் இவைகளை, உழுதவனுக்குச் சொந்தம் என்பது சரியல்ல. ஏன் ?

அந்தச் சொத்துக்களை இனமாக அளித்தவர்கள் அந்தக் காலத்திலேயே சமதர்ம சோஷலிச பாணியில் அதன் வருமானங்கள் செலவிடப்படவேண்டும் என்பதற்காக அவர்களுக்குத் தெரிந்த, அவர்களுக்கு நம்பிக்கையுள்ள, ஒரு வழி, வகை, திட்டம் இவற்றுடன் செலவிடப்பட வேண்டும் என்று முறையாகச் செய்திருக்கின்றுர்கள். இவை எதுவும் ஒரு தனி மனிதனின் சுய தேவைக்கு உபயோகமாக வில்லை. மேலும் இது கடவுளுக்கோ, சந்நிதானங்களுக்கோ, மடாதிபதிகளுக்கோ உரிமையுடையதல்ல. இந்த நிலங்கள் பல லட்சம் மக்களுக்கு உரிமையுள்ளது. கடவுளின் பேரால், மடத்தின் பேரால் பட்டா இருந்தும், இதன் வருமானத்தைப் பல லட்சம் மக்கள் அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட பணிகளைச் செய்து பங்கு பெற்றுக்கொள்கிருர்கள்.; உண்மையில் இது இவர்கள் அனைவருக்கும் கூட்டாகப் பயன்படுகின்ற சொத்து. மடம் மூலமாகச் செய்யப்படும் தொழில்களையும், இதர வேலைகளையும் செய்யும் தொழிலாளிகளுக்கும் பங்கு உண்டு. அந்த இதர தொழிலாளிகளுக்கும் உரிமை உள்ள நிலங்களை உழுபவனிடம்மட்டும் கொடுப்பது சரியல்ல.

**ஆலய நில வருமானத்தில் உரிமையுள்ளவர்கள் யார் ?**

1. கட்டிடம்கட்டும் சிற்பிகள், கொத்தர்கள், தச்சர்கள், கொல்லர்கள், இதர சிறிய வேலைகள் செய்யும் தொழிலாளிகளும்;

2. ஆலயத்தில் நாதஸ்வர விற்பன்னர்கள், பாடகர்கள், பிரசங்கிகள், நடன, நாடக கலைஞர்கள்.

3. ஆலயத்திலேயே எட்டு மணி என்றுகூடக் குறிப்பிடாது இரவு, பகல் எந்நேரமும் கட்டிக்காக்கும் தொழிலாளிகள்.

4. ஆலயத்தில் பூஜை புரியும் அர்ச்சகர்கள், சமையல்காரர்கள்.

5. திருவிழாக் காலத்தில் பலவித தொழில் செய்யும் நானுவித தொழிலாளிகள்.

6. இவைகள் யாவற்றையும் மேல் பார்க்கும் பல கணக்கர்கள், அதிகாரிகள்.

மேலே கண்டபடி ஆலய நிலங்களின் வருமானம் குறிப்பிட்ட திட்டப்படி பல விதத்தில் பலருக்கும் பகிர்ந்து சோஷலிச முறையில் கொடுக்கப்படுகிறதே தவிர எந்தக் கடவுளோ, சந்நிதானமோ தங்களுக்குப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. எனவே பல லட்சக் கணக்கான பேர்கள் இந்த நிலங்களின் வருமானத்தைப் பிரித்துக் கொள்வதை, உழுபவன் ஒருவனுக்கே கொடுப்பது என்பது' சோஷலிச சித்தாந்தத்துக்கு விரோதமானது. மேலும் லெனின் சொல்லிய (He who does not work, neither shall he eat) உழைக்காதவருக்கு உணவில்லை. ஆலய ஊழியர்களும் உழைத்து விட்டுத்தான் கூலி பெறுகிறார்கள். வேலை எதுவும் செய்யாமல் உணவுக்குக் கேட்கவில்லை.

From each according to his ability, to each according to his work (சக்திக்கேற்ற உழைப்பு, உழைப்புக்கேற்ற ஊதியம்) ஆகவே சாகுபடி செய்பவனுக்கு உழைப்புக்கு ஊதியமும், இதர பங்கை இதர ஊழியர்களுக்கும் அளிக்க வேண்டுவதுதான் நியாயமாகும்.

ஆகவே இந்த நிலங்கள் பறிக்கப்பட்டால் இதைக்கொண்டு பிழைக்கும் பல லட்சக்கணக்கான ஊழியர்களுக்கு மாற்றுப் பிழைப்பு தர அரசாங்கம் கடமைப்படுகிறது. எந்த அரசுக்கும் அது இயலாத காரியம். மேலும் ஆலய சொத்துக்கள், தர்ம சொத்துக்கள் சரிவர அந் நந்தத் தர்மங்களில் குறிப்பிட்டபடி பழக்க வழக்கப்படி நடத்துவதைக் கண்காணிக்க அந்தக்கால அரசர்களும், பின்னர் ஆங்கிலேய ஆட்சியினரும் பல முறைகளைக் கையாண்டனர். பின்னர் நாடு சுயேச்சை பெற்ற பிறகும் பலவித சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகளின் விளைவே சென்னை அறநிலையச் சட்டம் XIV 1920, I 1925, II 1927, I 1928, V 1929, IV 1930, XI 1931, XI 1934, XII 1935, XX 1938, XXII 1939, V 1944,

1945. V 1947, XIX 1951, XXVI 1954 IX 1956 Act 22 of 1959,

மேற்கண்ட சட்டங்களின் மூலம் ஆலய சொத்துக்கள், மடத்துச் சொத்துக்கள், தர்ம சொத்துக்கள் அனைத்தும் நேர்மையான முறையில் அந்தந்தத் திட்டப்படி பகிர்ந்து சரியாக உபயோகப்படுத்தி வைக்கவும், இல்லையேல் பரிபாலிப்பவர்கள்மீது நடவடிக்கை எடுக்கவும் அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனவே சட்டத்தை முறையாகப் பயன்படுத்தி அவைகளைச் சரிவரப் பராமரிக்க வேண்டுவதுதான் அரசின் கடமை.

மேலும் அரசு மக்களுக்கு மத சுதந்திரத்திலும், பழக்க வழக்கங்களிலும் தலையிடுவது என்பது முன் ஆங்கில அரசாட்சியில்கூடக் கிடையாது. மேலும் இந்த அரசு இஸ்லாம் மதத்திலோ கிருஸ்துவ மதத்திலோ தலையிட முடிகிறதா? இந்து மதம்மட்டும் அதற்கு எப்படி விதி விலக்காகும்?

**பலவித விவசாயச் சட்டங்கள் கடன் நிவாரணச்சட்டம் :**

இவைகளால் ஆலயங்கள் மிகவும் பாதிக்கப்பட்டு, சாகுபடிதாரர்களில் நன்கு விளைந்தவர்களும், நெல் அளக்காமல் பாக்கி வைத்துக்கொண்டு, ஆலயங்கள் நித்தியபடி பூஜை நைவேத்தியங்களுக்கும், சிப்பந்திகள் சம்பளத்துக்கும் நிதியின்றிப் பல்லாயிரக் கணக்கான சிப்பந்திகள் பட்டினி கிடக்கின்றனர். அரசின் சட்டங்களின் மூலம் குடியானவர்கள் வாழவும், லட்சக்கணக்கான ஆலய ஊழியர்கள் துன்புறவும் செய்திருக்கிறது. ஆகவே எல்லாச் சட்டங்களிலிருந்தும் ஆலயச் சொத்துக்களுக்கு-இதர தர்மசொத்துக்களுக்கு விதி விலக்கு அளித்து உடனடியாக வசூல் செய்ய, சாதகமான நிலையைச் செய்துகொடுக்க வேண்டியது அரசின் கடமையாகும். இல்லையேல் விரைவில் வெகு ஆலயங்கள் இழுத்துப் பூட்டப்பட்டு விடும் நிலை தோன்றியிருக்கிறது. மேலும் இந்த அரசுக்கு ஆத்திகர்களின் உரிமையையும், உணர்ச்சியையும், முற்காலத்தில் தர்மம் செய்தவர்களின் நோக்கத்தையும் நிறைவேற்ற வேண்டிய பொறுப்பும் இருக்கிறது.

**மனைகளும், அதில் கட்டிடம் கட்டி இருப்பவர்கள் நிலையும் :**

கிராமங்களில் பெரும்பாலும் ஆலயங்கள் - மடங்கள் நிலங்களில் வீடு கட்டிக் குடியிருந்து வருகின்றனர். நகரங்களிலும் இம் மாதிரி பல இடங்களில் ஆலயநிலத்தில் வீடுகட்டிக்குடியிருந்து வருகின்றனர். இவைகளுக்கு ஆண்டு பகுதி என்று கோப்பு எழுப்புவதைத்தவிர

பெரும்பாலும் வசூல் செய்யப்படுவதில்லை. மிக மிகச் சிறிய தொகையாக இருப்பதால் தாவாவுக்குப் போவதும் மிகுந்த சிரமம். பல ஆலயங்களில் இம்மாதிரி பாக்கி சுமந்து வருவதைத்தவிர, வசூல் செய்ய இயலாத காரியமாகவே இருந்துவருகிறது.

நகரங்களில்மட்டும் ஒருசில இடங்களில் நடவடிக்கைகளுக்குப் போகப்படுகிறது. இந்த நிலங்களில் குடியிருப்பவர்களில் பலர் இந்த நிலங்களை விலைக்கு எடுத்துக்கொள்ளக்கூடிய நிலையில் இருக்கின்றனர். மேலும் பகுதி செலுத்த அவர்கள் மறுத்தாலும் மனை தனக்கே சொந்தம்என்று ஆக்கிக்கொள்வதில் பணத்தைக் கொடுக்கத் தயாராக உள்ளனர். இம்மாதிரி எங்கெல்லாம் எந்தக் குடியிருப்புதாரர் விலக்கு எடுத்துக்கொள்ளச் சம்மதித்தாலும் அவைகளை இலாகா விற்றுவிட அனுமதிக்க வேண்டும். அம்மாதிரி விற்பனைத் தொகை நீண்ட கால வைப்புகளில் வங்கியில் போட்டால் வரும் வருமானம் நிலத்தின் பகுதியிலிருந்து கிடைக்கும் வருமானத்தைவிடப் பல நூறு மடங்கு அதிகமானதாக இருக்கும். அம்மாதிரி விலைகொடுத்து வாங்க முடியாதவர்கள் உசிதமான ஏற்பாடுகள் செய்துகொள்ளலாம். இவ்விஷயத்தில் இ. ம. அ. ச. பிரிவு சட்டப்படி ஏலத்தில்தான் விட வேண்டும் என்று வற்புறுத்தாது குடி இருப்பவரிடம்தான் விலை நிர்ணயம்செய்து விற்கவேண்டும்.

**விலை நிர்ணயிப்பது எப்படி ?**

ஆலய நிர்வாகியுடன், கிராம கர்ணம், கிராம முன்சீப் சம்பந்தப்பட்ட சப் - ரிஜிஸ்தரார் இவர்கள் அடங்கிய குழுக்கள் நியமித்து அவர்கள் நிர்ணயிக்கும் விலையை ஆணையர் முடிவுப்படி தீர்மானிக்க வைப்பது என்பது பொருத்தமாக இருக்கும்.

**ஆலயங்களின் கடமைகள் :**

அனுபவத்தில் வைத்திருக்கும் கடைகளை அடிக்கடி ஏலம் விடுவதாக ரிகார்டுகள் தயாரிக்கப்படுகிறதே தவிர ஏலம் உண்மையில் விடப்படுவதில்லை. அவைகளை ஏலத்தில் வைப்பதே தவறு. ஆலயத்தில் அனுபவத்துக்கு வராத ஒரு சொத்தை ஏலத்தில் விட்டு, தற்காலம் அனுபவிப்பவரைத்தவிர வேறு நபர் ஏலம் எடுத்தால் வீண் விவகாரம் வளருமே தவிர பயன் இல்லை. இவைகளுக்கு ஐந்தாண்டுக்கு ஒரு முறை வாடகை நிர்ணயம் செய்ய இலாகாவில் ஒரு குழு நியமித்து வாடகை நிர்ணயித்துவிட வேண்டுமே தவிர ஏலம் என்பது கூடாது. ஆகவே ஆலய அறநிலையச் சட்டத்தில் விதிகள் திருத்தப்பட வேண்டும்.

# செய்திகள்

## தருமையில் ஆவணிமூல விழா

திருக்கயிலாயபரம்பரைத் தருமையாதீனத்தில் ஆன்மார்த்த பூசாமூர்த்தியாக எழுந்தருளியிருந்து அருள்பாலித்துவருகின்ற ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானுக்கு வழக்கம்போல இவ்வாண்டும் ஆவணி மூல விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது. 11—9—78 ஆவணிமூல நன்னாளன்று பெருமானுக்குக் காலை மாலை இருவேளைகளிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன.

மாலை வழிபாட்டில் சென்னை ஓய்வு பெற்ற உயர்நீதிமன்ற நீதிபதி திரு. எஸ். மகராஜன் அவர்களுக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் இலக்கிய ரஸிகமணி என்ற பட்டமளித்துப் பொன்னாடை போர்த்தி ஆசியருளினார்கள். பெருமக்கள் பலரும் வழிபாட்டில் கலந்துகொண்டு அருட்பிரசாதம் பெற்றனர்.

ஆவணிமூல விழா நாட்களில் ஆதீன பூஜை மடத்தில் நாடோறும் மாலை 9-மணியளவில் ஆதீனக்கல்லூரி ஆசிரியர்களாலும் ஆதீனத்திருக்கூட்டத்து அடியார்களாலும் மணிவாசகப்பெருமானைப் பற்றிய திருவிளையாடல்கள் படிக்கப்பெற்றன. ஆவணிமூல விழா அன்று மதுரைத் திருப்பதிகங்கள், சொக்கநாத வெண்பா ஆகியவை அகண்டபாராயணம் செய்யப்பெற்றன. வழிபாட்டின் முடிவில் விழா மலராக அச்சிடப்பெற்ற 'திருவிளையாடற் போற்றிக்கலிவெண்பா' என்ற வெளியீடு வழங்கப்பெற்றது.

## ஆதீனக் கல்விநிலையங்களின் ஆண்டு விழா

தருமையாதீனத்தில் நடைபெற்று வரும் கல்விநிலையங்களின் ஆண்டுவிழா, ஆவணிமூல விழாவைச் சார 9, 10, 11—9—78 ஆகிய மூன்று நாட்களிலும் நடைபெற்றது. 9—9—78 முதல்நாள் ஸ்ரீ குருஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளி - உயர்நிலைப்பள்ளிகளின் ஆண்டு விழா, தோத்திரத் திருநாளாகக் கொண்டாடப்பெற்றது. ஆதீனக் கல்லூரி முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. தேவாரம் என்பது பற்றியும், ஆதீனக்கல்லூரிப் பேராசிரியர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ. திருவாசகம் என்பது பற்றியும், ஆதீன உயர் நிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் திரு. கா. ம. கண்ணப்பன்

பிற திருமுறைகளைப்பற்றியும் சொற்பொழி வாற்றினுர்கள். ஆதீனத் தொடக்கப்பள்ளி மாணவர்களின் கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன.

10—9—78 சாத்திரத்திருநாள். ஆதீனத் தேவாரப் பாடசாலை வேத சிவாகமபாடசாலைகளின் ஆண்டு விழா. அன்று ஆதீனக் கல்லூரித் துணைப்பேராசிரியர் வித்துவான். திரு. வி. சபேசன் சாத்திரங்களை அருளிய ஆசிரியர்களைப்பற்றியும், கல்லூரிப்பேராசிரியை வித்துவான். திருமதி ப. நீலா எம். ஏ. சாத்திரநூல்களைப்பற்றியும் சொற்பொழிவு நிகழ்த்திஞர்கள். முடிவில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி மாணவ - மாணவிகளின் கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன.

11—9—78 புராணத்திருநாள். பட்டமளிப்பு விழாவும் ஆதீனப் பல்கலைக்கல்லூரி - சைவ சித்தாந்தக் கல்லூரிகளின் ஆண்டுவிழாவும் நடைபெற்றன. அன்று ஆவணிமூலநன்னுளாதலின் இரவு ஸ்ரீ சொக்க நாதப்பெருமானுக்குச் சிறப்புவழிபாடு நிகழ்ந்தபிறகு 7-மணி யளவில் விழா தொடங்கிற்று. சிதம்பரம் டாக்டர் திரு. கே. அரங்கசாமிப் பிள்ளை அவர்கள் அனைவரையும் வரவேற்றுப்பேசினுர். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் விழாவில் எழுந்தருளியிருந்து பட்டமளிப்பு விழா ஆசியருளினுர்கள். ஆதீனக் கல்வி நிலையங்களின் ஆண்டு அறிக்கைகள் படிக்கப் பெற்றன. ஆதீனக் கல்லூரிப் பேராசிரியர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ., முப்பெரும் புராணங்கள் என்ற தலைப்பில் விரிவுரை நிகழ்த்திஞர். தருமை யாதீனப்புலவர் டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ. பி.எச்டி. அவர்களும், மாயூரம் தருமை ஸ்ரீஞானும்பிகை கலைக்கல்லூரி முதல்வர் செல்வி. சி. பார்வதி எம். ஏ. அவர்களும் பாராட்டுரை வழங்கினர்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஆதீனக் கல்வி நிலையங்களில் பயின்று ஒவ்வொரு வகுப்பிலும் முதன்மையாகத் தேர்ந்த மாணவர்களுக்குப் பரிசுகளும் நற்சான்றிதழ்களும் வழங்கியருளினுர்கள். ஆதீனத்தேவாரப்பாடசாலையில் முறையே ஐந்துஆண்டுகள் பயின்றுமுடித்த மாணவர்களுக்குத் 'தேவார இசைமணி' பட்டமும், ஆதீன வேதசிவாகமபாடசாலையில் பயின்றுமுடித்த மாணவர்களுக்கு 'ஆகமப்பிரவீண' என்ற பட்டமும் வழங்கப்பெற்றன.

ரஸிகமணி பட்டம் பெற்ற திரு. எஸ். மகராஜன் அவர்கள் பட்டம் வழங்கி ஆசியருளிய ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் பெருங்கருணையைப் பாராட்டி நன்றி தெரிவித்துக்கொண்டார்கள்.

மண் சுமந்த படலத்தில் விஞ்சிநிற்பது இறைவன் எளிவந்த கருணையா, மணி வாசகப்பெருமானின் பக்தியா என்பதுபற்றி ஆதீனப்பல்கலைக்கல்லூரி மாணவர்களின் பட்டிமன்றநிகழ்ச்சியுடன் விழா இனிது நிறைவேறியது.

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் இருபத்தாருவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் இம்மாத ஜன்ம நக்ஷத்திரமாகிய ஆயில்யத்திருநாள் வழிபாடு 28—9—78 வியாழக்கிழமை காலை திருப்பாலைத்துறை அருள்மிகு தவள வெண்ணகையாள் உடனுகிய அருள்மிகு பாலைவனநாதர் ஆலயத் திலும், மாலை திருக்கருகாவூர் அருள்மிகு கரும்பனையாள் உடனுகிய அருள்மிகு முல்லைவனநாதர் ஆலயத்திலும் சிறப்பாகநடைபெற்றது. இரு தலங்களிலும் விசேஷ அபிஷேக அலங்காரஆராதனைகள் நடை பெற்றன. தலத்திருப்பதிகம் அச்சிட்டு வழங்கப்பட்டது. திருப்பாலைத் துறையில் ஆலய நிர்வாக அதிகாரி திரு. வி. சுப்பராயன் அவர்கள் தலைமையில் திருக்கருகாவூர் தொண்டர் திரு. கோ. சிவஞானமும் திருக்கருக்காவூரில் திரு. T. S. கோபாலய்யர் அவர்கள் தலைமையில் ஆதீனப்பல்கலைக்கல்லூரிப் பேராசிரியர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ. அவர்களும் சொற்பொழிவாற்றினுர்கள். வாரவழிபாட்டுக் குழுவின் செயலர் திரு. கே. பாலசுப்பிரமணியம் அவர்கள் அனை வரையும் வரவேற்றுப் பேசினுர்கள். ஆங்காங்கும் அன்பர்கள் வழி பாட்டில் கலந்துகொண்டு கண்டும் கேட்டும் இன்புற்றனர்.

## ஸ்ரீ அருணந்திதேவர் குருபூஜை விழா

தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி திருக்கோயிலில் 30—9—78 சனிக்கிழமை ஸ்ரீ அருணந்திதேவ நாயனுருக்கும், ஏனைய சந்தானுசாரியர்களுக்கும் விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகள் நிகழ்ந்தன. அவர்கள் அவதாரஸ்தலமாகிய திருத்துறையூர் ஸ்ரீ சிஷ்ட குருநாதேசுவரர் ஆலயத்திலும் திருவாவடுதுறை ஆதீன அருளாட்சி யில் விளங்கும் ஸ்ரீ அருணந்திதேவர் குருமூர்த்த ஆலயத்திலும் அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தப்பெற்றன. ஆங்காங்கும் வழிபாட் டிற்குப்பின் ஆதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர்கள், திருவதிகை வித்துவான். திரு. ந. சண்முகசுந்தர தேசிகர், தொண்டர் திரு. சிவஞானம் ஆகியோர்களால் சமய விரிவுரைகள் நிகழ்த்தப்பெற்றன.

## இருபத்தெட்டாவது சதசண்டி வேள்வி

தருமையாதீனம் ஸ்ரீ மகாலட்சுமி துர்க்காதேவி ஆலயத்தில் இவ்வாண்டு நவராத்திரி விழாவை முன்னிட்டு 2—10—78 முதல் இருபத்தெட்டாவது சதசண்டி வேள்வி சிறப்பாக நடைபெற்றது. நாடோறும் காலையிலும் மாலையிலும் யாகபூஜை,சதுர்வேதபாராயணம், துர்க்காசூக்தபாராயணம், திருமுறைப்பாராயணம், அபிராமி அந்தாதி பாராயணங்களும், லட்சார்ச்சனையும், ஸ்ரீவித்யாசக்ரமாகிய மேருவிற்கு சகஸ்ரநாமார்ச்சனையும் மற்றும் விசேஷ அபிஷேக அலங்கார ஆரா தனைகளும் நடைபெற்றன. காலை பூர்ணுகுதி தீபாராதனைக்குப்பிறகு

சுவாசினீபூஜை, குமாரி வடுபூஜைகளும் நிகழ்ந்தன. இரவு பூர்ணாகுதி வழிபாட்டில் தருமையாதீன வேத சிவாகம பாடசாலை ஆசிரியர், பிரவசனரத்னம், வியாகரணசிரோமணி, இந்திவிசாரத், திரு. P. S. கிருஷ்ணமூர்த்திசாஸ்திரிகள் தேவியைப்பற்றிஸப்தசதியில் சொல்லப் படும் சிறப்புக்களை விளக்கி விரிவுரையாற்றினார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் காலையிலும் மாலையிலும் யாகபூஜைக்கு எழுந் தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கியருளி னார்கள். அன்பர்கள் பலரும் வழிபாட்டில் கலந்துகொண்டு திருவருள் பிரசாதம் பெற்று மகிழ்ந்தனர். 10—10—78 சப்தசதீஹோமம், மகா பூர்ணாகுதி தீபாராதனை. இரவு தீபபூஜை ஆகியனவும், 11—10—78 அன்று துர்க்காதேவிக்குச் சத்சண்டியக்ஞ கலசாபிஷேகமும் நிகழும்.

## ஆதீனக் கல்வி நிலையங்களின் கலைமகள் விழா

தருமையாதீனத்தின் கல்வி நிலையங்களாகிய ஸ்ரீ குருஞான சம்பந்தர் தொடக்கப்பள்ளி, ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி, பல்கலைக் கல்லூரி, வேத சிவாகம பாடசாலை, தேவாரப் பாடசாலை இவைகளின் சார்பில் நடைபெறும் கலைமகள் விழா இவ்வாண்டும் நவராத்திரி விழா நாட்களில் சிறப்பாக நிகழ்ந்தது. 2—10—78 திங்கட்கிழமையன்று மாயூரம் - மன்னன்பந்தல் அ. வ. அ. கல்லூரிப் பேராசிரியர் திரு. தி. வ. காந்திமதிநாதன் பி. ஏ., ஆனர்சு அவர்கள் விழாவைத் தொடங்கிவைத்துச் சிறப்புரையாற்றினார்கள். அடுத்து ஒவ்வொருநாளும் பேரறிஞர்கள் சிறப்புரையாற்ற, ஆதீனக் கல்வி நிலையங்களின் ஆசிரியர்களும், மாணவ – மாணவிகளும் அன்னையின் அருள் நூல்களைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். சொற் பொழிவுகளைத் தொடர்ந்து ஆதீனக் கல்வி நிலைய மாணவர்களின் கலை நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன.

## தருமையாதீனத்திருக்கோயில்களில் நவராத்திரி விழா

நவராத்திரி விழாவை முன்னிட்டுத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான வைத்தீசுவரன்கோயில் (வேளூர்), சீகாழி, திருக்கடவூர், திருப்பனந்தாள், திருபுவனம், குத்தாலம், திருவையாறு, குறுக்கை, ஆச்சாள்புரம், மாயூரம் – வள்ளலார்கோயில் முதலிய தேவஸ்தானங் களில் அம்பிகைக்கு விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகளும், நவசக்தி அர்ச்சனை, லட்சார்ச்சனைகளும், சமயச் சொற்பொழிவுகளும் சிறப்பாக நடைபெற்றன. ஆங்காங்கும் அன்பர்கள் வழிபட்டு அன்னையின் அருள்பெற்றனர்.

## மின்விளக்கேற்று விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான கருங்குயில்நாதன்பேட்டை ஸ்ரீ சத்திபுரீசுவரர் திருக்கோயிலில் புதிதாக அமைக்கப்பெற்ற மின்

விளக்கேற்று விழா 25—9—78 திங்கட்கிழமை சிறப்பாக நடைபெற்றது. பகல் 11-மணியளவில் விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகள் நிகழ்ந்தன. ஆதீனப்பாடசாலை மாணவர்களாலும் ஆதீன தேவஸ்தான ஓதுவாமூர்த்திகளாலும் திருமுறைப் பாராயணம் நிகழ்த்தப்பெற்றது. மாலை 6-மணி அளவில் விழா தொடங்கியது. ஆதீனத்தின்சார்பில் ஆதீனக்கல்லூரி முதல்வரும், தேசிய சேவைத் திட்டத்தின் சார்பில் மாயூரம் தருமை ஸ்ரீ ஞானம்பிகை மகளிர் கலைக் கல்லூரி முதல்வர் செல்வி. சி. பார்வதி எம். ஏ. அவர்களும் அனைவரையும் வரவேற்றுப் பேசினார்கள். மாயூரம் கோட்டாட்சித்தலைவர் திரு. சோணமுத்துக்கோன் அவர்கள் மின்விளக்கேற்றிவைத்துச் சிறப்புரையாற்றினார்கள். தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி ஆசியுரைஅருளி அன்பர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கியருளினார்கள். சுவாமிக்குப் பஞ்சமுகார்ச்சனையும் அம்பாளுக்கு நவசக்தி அர்ச்சனையும் நடைபெற்றன. அன்பர்கள் வழிபட்டுத் திருவருளையும் குருவருளையும் பெற்று மகிழ்ந்தனர்.

## காவிரியில் மூங்கில்பாலம் திறப்பு விழா

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி தேசிய சேவைத் திட்டத்தின் கீழ், தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் அருளாதரவினாலும் கருங்குயில்நாதன்பேட்டை, மணக்குடி, தருமபுரம் ஆகிய கிராம மக்களின் துணையினாலும் கல்லூரி மாணவர்களின் பெருமுயற்சியில் தருமபுரம் காவிரியில் ரூ. 1500 மதிப்புள்ள மூங்கில் பாலம் அமைக்கப்பட்டுள்ளது. அதன் திறப்பு விழா 6—10—78 வெள்ளிக்கிழமையன்று நடைபெற்றது. விழாவிற்குத் தருமபுரம் ஸ்ரீ ஞானம்பிகை அரசினர் மகளிர் கலைக் கல்லூரி முதல்வர் செல்வி. சி. பார்வதி எம். ஏ. அவர்கள் தலைமை தாங்கினார்கள். தமிழ்க்கல்லூரி முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. அவர்கள் சிறப்பு விருந்தினர்களை வரவேற்று உரை நிகழ்த்தினார்கள். கல்லூரித் தேசிய சேவைத் திட்ட அலுவலர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ. அவர்கள் திட்டப்பணிகள் குறித்து விளக்கிக் கூறினார்கள். மாயூரம் கோட்டாட்சித் தலைவர் திரு. சோணமுத்துக்கோன் அவர்கள் பாலத்தைத் திறந்துவைத்துச் சிறப்புரை ஆற்றினார்கள். மன்னன்பந்தல் அ. வ. அ. கல்லூரித் துணைப்பேராசிரியர் திரு. அ. கலியபெருமாள் எம். ஏ. அவர்கள் சிறப்புச்சொற்பொழிவாற்றினார்கள். மாணவர் செயலர் நன்றிகூற நாட்டுப்பண்ணுடன் விழா இனிதே நிறைவுற்றது.

விழாவில் தருமபுரம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளி, தருமபுரம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளி ஆசிரியர்களும் மாணவர்களும் தருமபுரம், மணக்குடி, கருங்குயில்நாதன்பேட்டை ஆகிய ஊர்களில் வாழ்கின்ற பொதுமக்களும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.





**ஜோதிஷம். திரு. A. இராசமாணிக்கம்**

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.


**காளயுக்திஸு ஐப்பசி 1உ முதல் 30உ முடிய.**

**(18—10—78 முதல் 16—11—78 முடிய)**

ஸ்ரீ காளயுக்திஸு புரட்டாசிமீ 31உ மங்களவாரம் பரணி நக்ஷத்திரம் தைதுல கரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 35 நாழிகை 34 விநாடிக்கு ரிஷபலக்னத்தில் ஸ்ரீ லோக ரட்சகரான சூரியபகவான் கன்னியா ராசியிலிருந்து துலாராசி சங்கிரமணமாக ஐப்பசி மாதம் பிரவேசம் செய்கிருர். அன்று துலா விஷு புண்ணிய காலமாகும். மறுதினம் ஐப்பசி மாதத்தின் முதல்தேதியாகிறது. இரஸாதிபதி செவ்வாய் பகவான் ஆகிருர். சங்கிரம கால கிரகஸ்திதி யின் பலனவது லோகத்தில் அக்கிரமங்கள் வீயும். கடத்தல்காரர்கள் இராஜதுரோகர்கள், கொள்ளையர்கள் ஆகியோருக்கு அரசாங்கத்திஞல் ஆக்கினை யேற்படும். தேசங்களில் பிரஜைகளுக்கு வேண்டிய அவசியப் பொருள்களின் விலைவாசி ஏற்ற இரக்கமின்றிச் சம நிலையில் இருந்துவரும். வெளுமை வஸ்துக்களாகிய ஜவுளி, காகிதம் போன்ற வற்றின் உற்பத்திபெருகி விலை குறையும். இரஸப்பொருள்களாகிய எண்ணெய், நெய், சர்க்கரை, உப்பு ஆகியவை நிறைந்துவரும்.

தேசத் தலைவர்கள் நீதியாக ஆட்சிசெய்து பிரஜா சம்ரக்ஷணம் பாலிப்பார்கள். நாடுகளில் முற்போக்காகச் சிறு தொழில்கள் ஆலைத் தொழில்களில் உபயோகப் பொருள்களின் உற்பத்திபெருகி நாட்டின் பொருளாதாரம் தழைக்கும். பிரஜைகள் ஜீவனேபாயம் பெற்று உய்வார்கள்.

உலகில் உள்ள திருமடங்கள் ஆசாரியபீடங்களில் உள்ள லோகம் போற்றும் உத்தமசீலர்களாக-தெய்வீகம் பொருந்திய ஞானகுருமகான் கள் திருவெழுந்து அருளுகின்ற சிவஞான உபதேசத்திஞல் உயர்ந்த முதல்வகை சிஷ்யகோடிகள், அவர்கள்வழிச் செல்கின்ற சிவாசாரிய நெறியாளர்கள் லோகமாந்தர்கள் அனைவரும் தெய்வஞானமும் ஐஸ்வரியப்பெருக்கும் உடையவர்களாகிப் பொலிவுடைய திருமுகத் துடன் விளங்குவர். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் தெய்வ ஆராதனைகள், திருமுறைப் பாராயணங்கள், தெய்வப்பிரீதியான

வாத்தியகீத ஓசைகள், வேத முழக்கங்கள் சிறப்பாக நடைபெற்று வரும். பக்தகோடிகள் பரமனின் சிந்தையுடையவர்களாகிப் பரவச மெய்துவர். லோகத்தில் ஆஸ்திக நெறியாளர்களின் திருச்சபை பல வாக ஏற்படும். சிவசமயம் உலகெங்கும் பரவுவதாகும். எல்லாப் பிரஜைகளும் ஜீவனோபாயத்தில் உயர்வழிபற்றித் தெய்வ சிந்தனை மிகுந்து அமைதி வாழ்க்கை நடத்திவருவார்கள்.

## இராகு கேது பெயர்ச்சி

குறிப்பு :— காளயுக்திளு ஐப்பசிமீ 12உ (29—10—78) ஞாயிற்றுக்கிழமை உதயம் முதல் 31 நாழிகை 49 விஞடிக்கு மாலை மணி 6¼ அளவில் உத்திரநக்ஷத்திரம் முதல்பாதத்தில் சிம்மராசியில் ராகுபகவானும் பூரட்டாதிநக்ஷத்திரம் 3ஆம் பாதத்தில் கும்பராசியில் கேதுபகவானும் வருவார்கள். அவ்விராசிகளில் அவர்களுக்கு 1½ ஆண்டு காலம் ஆதிக்கம் உண்டு. (இராகு கேதுக்கள் சாயாகிரகங்கள் எனப்படும்.) அவற்றிற்குத் தினகதி 3 கலை 11 விகலையாகும். அவை இராசி மண்டலத்தில் அப்பிரதக்ஷணமாக ஏககாலத்தில் சமகதியில் சஞ்சரிப்பனவாகும்.

இராகு கேதுக்கள் ஸ்ரீ வடுவழகி அம்பாளின் சிரசின் மீது வீற்றிருக்கும் சர்ப்பம் போன்று இராசி மண்டலத்தைப் பற்றுவதாகின்றன. இராசி மண்டலத்தில் அவற்றிற்குத் தனிஇடம் இல்லை. பூமியில் மானிடர்களின் ஜனனகாலத்தில் அவை எம்மனைகளில் பற்றியிருந்தனவோ அப்பாவகத்தின்படி யோக அவயோகங்களை ஏற்படுத்துவதாகின்றன.

இராகு கேதுக்களின் பெயர்ச்சியினுல் 1½ ஆண்டுகாலத்திற்கு இராசிகளுக்கு நடக்கும் பலனுவது மேஷம், மிதுனம், கன்னி, துலாம் தனுசு, மீனம் இவ்விராசிகளாயின் இலாப விருத்தி, பொன்மணி பூஷணமணிதல், மனோதைரியம், வெற்றிப் பிரதாபம், ரோகநிவர்த்தி ஆகிய நற்பலன்களை அளித்துவரும்.

ரிஷபம், கடகம், சிம்மம், விருச்சிகம், மகரம், கும்பம் இவ்விராசிகளாயின் தாய் தந்தைக்குத் தேகபீடை, அடிக்கடி பயணம், விபத்து சம்பவித்தல், சரீர கஷ்டம், பிரம்மை ஆகிய சஞ்சல பலனுகும்.

மேற்கண்ட துர்ப்பலன் எதுவும் சிவத்தொண்டாற்றும் சிவஞானிகளுக்கும் தவசிகளுக்கும் சிவனடியார்களுக்கும் ஏற்படுவதில்லை.

லோகத்தில் எல்லாப் பிரஜைகளும் ஸ்ரீதுர்க்காம்பிகைக்குஅபிஷேக ஆராதனைகள் செய்து நெய்தீபம் ஏற்றிவரத் துன்பம் விலகி சுபிட்சம் ஏற்படும்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை $\frac{1}{4}$**

**( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )**

மேஷராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்பாபிவிருத்தியில் தனதானிய சம்பத்துக்களை உண்டுபண்ணும். 8உக்கு மேல் வித்து வத்துவம் கலைத்துறையில் எழுத்துமூல காரியங்களில் முன்னேற்ற நிலைமையாகும். சகோதரருக்குச் சௌகரியங்களை அளிக்கும். இயந்திர வாகனங்களின் சௌகரியங்கள் திருப்தி அளிக்கும். புத்திரர் பௌத்திரர்களுக்குச் சௌகரியம் தரும். மனைவிக்குச் சிரோபாதை போன்ற நலிவு ஏற்பட்டு குணமாகும். ஐப்பசி மீ 15உ 59 நாழிகை 33 விஞடிமுதல் 18உ 9நாழிகை 14 விஞடிவரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**2, ரிஷபம் :- கார்த்திகை $\frac{3}{4}$ - உரோகிணி – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$**

**( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வூ - வே. வோ. )**

ரிஷபராசி 9 பாதங்களும் சுமார் பலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் மாதமுன்பகுதியில் 8உக்குள் திரண்ட பொருள் வந்து சேரும். சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். இயந்திர சாதனங்களில் விருத்திகாணும். கால்நடை ஜீவன்களுக்குச் சர்ப்ப தோஷம் வரச்செய்யும். நாககன்னிக்கு அருச்சனை செய்தல் நலம். புத்திரர் நலன்களில் செலவினங்கள் ஏற்படும். தாம்பத்ய வாழ்வில் சுமுகம் நிலவும். 19உக்கு மேல் புத்திரோற்பத்தி ஏற்படும். ஐப்பசி மீ 18உ 9 நாழிகை 14 விஞடி முதல் 20உ 15 நாழிகை 52 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ - திருவாதிரை – புனர்பூசம் $\frac{3}{4}$**

**( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )**

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவரவுகளில் நல்லநிலைமையை ஏற்படுத்தும், எழுத்து மூலகாரியங்களில் இராசாங்க நிபந்தனை ஏற்படினும் 8உக்கு மேல் சுமூகதீர்வுகாணும். பெற்ரேருக்கு மயக்க நலிவு தோன்றி உடன் குணமாகும். ஞாயிற்றுக்கிழமை சூர்யார்ச்சனை செய்ய நலம் தரும். விவசாயத்தில் நற்பலன் ஏற்படும். தாரபுத்திரர்களுக்கு நலம் தரும். விவகாரம் மறைமுக எதிர்ப்புகளில் 2-வது வாரம்முதல் ஜெயபிராப்தி யாகும். ஐப்பசிமீ 20உ 15 நாழிகை 52 விஞடிமுதல் 22உ 21 நாழிகை 50 விஞடிவரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**

( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே.. டோ. )

கடகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் தனதானிய வருமானங்கள் வெகுவாக வந்து சேரும். அதற்கேற்ற விசேஷ செலவுகளும் ஏற்படும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். இரண்டாவது வாரம் முதல் சற்றே மனோவேகமும் நெஞ்சுவலி வருவதும் ஆகும். ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு அருச்சனை செய்ய நலமாகும். 19உ முதல் சகல காரியங்களிலும் ஜெய பிராப்தியும் இலாப பிராப்தியும் ஏற்படும். வாகன சௌகரியம் நன்ருக இருந்துவரும். ஐப்பசிமீ 22உ 21 நாழிகை 50 வினுடிமுதல் 24உ 29 நாழிகை 13 வினுடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$**

( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )

சிம்மராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். தானுதி சௌகரியங்களில் 8உ முதல் நல்ல நிலைமையை ஏற்படுத்தும். சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். 19உ அளவில் ஓர்ஆபரண பிராப்தியைத் தரும். சந்தோஷ சம்பவங்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். உடலில் சில விஷ அரிப்புவந்து உடன் குணமாகும். புத்திரர் பௌத்திரர்களின் நலன்கள் நன்ருக இருந்துவரும். தாம்பத்யவாழ்வில் விருப்பு வெறுப்பு கலந்து இருப்பினும் சௌகரியங்களை அளித்துவரும். செய்தொழிலில் முன்னேற்றம் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். ஐப்பசிமீ 24உ 29 நாழிகை 13 வினுடிமுதல் 26உ 40 நாழிகை 9 விஞுடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

( டோ. பா. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவரவு செலவுகள் சரிசமமாக இருந்துவரும். வித்தியா வியாபாராதி கலைத்துறையில் மாத முதலில் கண்யமும் அரசாங்க நன்மையும் ஏற்படும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும். வீடு வாகன சம்பந்தமாக ஓர்சர்ச்சை வந்து நீங்கும். புத்திரர் சம்பந்தமாக அதிக செலவினங்கள் இருப்பினும் நன்மையை ஏற்படுத்தும். தாம்பத்திய வாழ்க்கை தெய்வபக்தியாக நடந்துவரும். ஐப்பசிமீ 26உ 40 நாழிகை 9 விஞுடிமுதல் 28உ 56 நாழிகை 40 விஞுடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$**

( ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தீ தா. தே. )

துலாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடக்கும். குடும்பாபிவிருத்தியில் தனவருமானங்கள் போஜன சௌகரியங்களில் திருப்திகரமாக இருந்துவரும். சகோதரர்களுக்குச் சுபம்தரும். இயந்திர சாதனங்களில் பூமியில் விருத்திபலன் தரும். இராசிக்கு உஷ்ணுதிக்கமாக சிரோபாதை இருமல்வந்து உடன் குணமாகும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய நலம்தரும். 8உக்கு மேல் கணிசமான பொருள் கைக்கு வந்து சேரும். தார புத்திரர்களின் நலன் நன்ருக இருந்துவரும். ஐப்பசிமீ 2, 3, 29, 30 தேதிகள் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ அனுஷம் – கேட்டை.**

( தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு. )

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் கௌரவ நிலைமையில் பணவருமானங்கள் வந்து கொண்டிருக்கும். அவசியமான செலவுகளும் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும் இராஜகாரியங்களில் சில மனசங்கடங்கள்வரினும் புத்திசாதுரியமாகச் செயல்படும். வீடுவாகனங்களின் சௌகரியம் தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஐப்பசிமீ 4உ 1 நாழிகை 13 விஞடிமுதல் 6உ 29 நாழிகை 4 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

**9. தனுசு :- மூலம் – பூராடம் – உத்திராடம் $\frac{1}{4}$**

( யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர்ராசி 9 பாதங்களும் நற்பலனைத்தரும். மாதமுதலில் நல்ல வருமானங்கள்வரும். பிற்பகுதியில் குடும்பப் பிரச்னைகளில் விசேஷ செலவுகளைச் செய்தலாகும். வித்தியா வியாபாராதி கலைத்துறையில் சிறந்த நன்மையை உண்டுபண்ணும். வீடு வாகன சௌகரியம் மேலாக இருந்துவரும். தாயாருக்குச் சௌக்கியம் தரும். பிதாவின் உடல்நலம் பாதித்து உடன் குணமாகும். டாம்பீகவழி அல்லது பொது நலனில் வைராக்கியமும் செலவும் ஆகும். 19உக்கு மேல் புத்திரபாக்யம் ஒன்று ஏற்படும். ஐப்பசிமீ 6உ 29 நாழிகை 21 விஞடி முதல் 8உ 58 நாழிகை 19 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் –அவிட்டம் $\frac{1}{2}$**

( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி. )

மகரராசி 9 பாதங்களும் சுப பலன்தரும். தனக்காரகன் நிலைமையால் பணவருமானங்கள் பல விதத்தில் வந்துகொண்டிருக்கும்.

சகோதரர்நலம் நன்ருக இருந்துவரும். வித்தியா வியாபாராதி கலைத் துறைகளில் பிரசித்தம் ஏற்படும். வாகனப் பிராப்திஒன்று ஏற்படும். பூமிப் பிராப்தி உண்டாகும் தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். செய்தொழிலில் முன்னேற்றம் ஏற்படும். ஐப்பசிமீ 8உ 58 நாழிகை 19 விஞடி முதல் 11உ 24 நாழிகை 24 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு சுபமாகும்

**11. கும்பம் :– அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$**

**(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)**

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். பணவருமானம் ஏராளமாக இல்லாவிடினும் குடும்பப் பிரச்சினைகளைச் சரிசெய்யும் அளவில் வந்துகொண்டிருக்கும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். 8உக்குமேல் எல்லா விஷயங்களிலும் மேன்மை ஸ்திதி ஏற்படும். தொழில் துறைகளில் அலுவல்கள் புத்திசாதுரியம் மிகுந்து துரிதமாக நடைபெற்றுவரும். 19உ அளவில் சினிமா காண்ட்ராக்ட் ஒப்பந்தங்களில் நற்பலனை உண்டுபண்ணும். புத்திரர் பௌத்திரர்களுக்கு நலம் தரும். மனைவி நலம் சாதாரணமாக இருந்துவரும். ஐப்பசிமீ 11உ 24 நாழிகை 24 விஞடி முதல் 13உ 44 நாழிகை 58 விஞடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**12. மீனம் :– பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி.**

**(தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி.)**

மீனராசி 9 பாதங்களும் பணவருமானங்கள் கெடியானதோரணைக் கேற்ப வந்துகொண்டிருக்கும் பூர்வப்பொருளில் விக்கிரயத்துக்கான நெருக்கடிவந்து உடன் புத்திசாதுரியத்தினுல் சமாளித்தல் ஆகும். சகோதரர் சகோதரிகளுக்குச் சௌக்கிய பலன்தரும். வீடு வாகன சௌகரியங்கள் மிகவும் நன்மையாக இருந்துவரும் 19உ அளவில் பசுபால் பிராப்தியில்திருப்தியளிக்கும். புத்திரர்களின்நலம் நன்ருகஇருந்து வரும். மனைவிக்கு இரத்தாதிக்கத்தினுல் நலிவு தோன்றி உடன் குணமாகும். ஐப்பசிமீ 13உ 44 நாழிகை 58 விஞடி முதல் 15உ 59 நாழிகை 33 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.



# அன்னை அருள்மாலை

திருமுறைக் கலாநிதி

**வேலூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.**

வானவர் இறைஞ்சுகட வூர்மயா னம்மன்னும்
மலர்க்குழல் மின்னம்மையே
வளமுற்ற வேட்டக் குடிசாந்த நாயகி
வண்டுறை தெளிச்சேரியே
தானமரும் சத்தியம் மைதிருத் தருமபுரம்
தங்குதே னமிர் தவல்லி
சாருநள் ளாறுபோ கமார்த்த பூண்முலைத்
தையலாள் கோட்டாற்றிலே
தேனொத்த செல் விவண் டமர்பூங் குழலம்மை
சிவனுறை திருவம்பரே
சேர்ந்தபூங் குழலம்மை திருஅம்பர் மாகாளம்
தித்தித் திடும்செந்தமிழ்ப்
பானலங் கண்டுஎன் அச்சந் தவிர்த்தம்மை
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம் அடைந்தென்றும்
பணிவேற்கருள் அன்னையே. (14)

மாயச்சூர் மாளவடி வேலெடுத் தான்தந்தை
மருவுதிரு மியச்சூரே
மகிழ்சௌந் தரஅம்மை மியச்சூ ரிளங்கோயில்
மன்னுமே கலாம்பிகை
தூயதிருத் திலதைப் பதிபொற் கொடியம்மை
தொல்வினை யகல்பாம்புரம்
தோடுடைய வண்டார்பூங் குழலிதிருச் சிறுகுடி
துணைவருமங் களநாயகி
தாயா யெனக்கருள் சங்கரன் உமாபதி
தங்குதிரு வீழிமிழலை
சஞ்சலம் அகற்றிடும் சுந்தர குஜாம்பிகை
சாலநல் மடையில்வாளை
பாயுந்திரு வன்னியூர்ப் பார்வதி யம்மையே
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம்அடைந் தென்றும்
பணிவேற்கருள் அன்னையே. (15)

---

# ஐப்பசிமாதச் சிறப்பு நாட்கள்

18—10—78 புதன், மாயூரம்வள்ளலார்கோயில், திருவையாறு துலாவிஷு தீர்த்தம். திருக்கடவூர் ஸ்ரீ காலசங்காரமூர்த்தி அபிஷேகம். சீகாழி உமாமகேசுரருக்கு உச்சிக்காலத்தில் புழுகாப்பு. துலா ஸ்நான ஆரம்பம். தருமபுரம் ஸ்ரீ தருமபுரீசுவரர் ஆலயத்தில் சண்முகர் கிருத்திகை அபிஷேகம். கிருத்திகை விரதம்.

19—10—78 வியாழன், வேளூர்க்கிருத்திகை, 22வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

24—10—78 செவ்வாய், சத்தி நாயனுர் குருபூஜை. 25-வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

26—10—78 வியாழன், 10-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை

27—10—78 வெள்ளி, தருமையாதீனம் 26-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஞானபீடம் அமர்ந்தநாள்.

29—10—78 ஞாயிறு, பிரதோஷம். ராகு சிம்மத்திலும் கேது கும்பத்திலும் பிரவேசம். 31-49.

30—10—78 திங்கள், மாதசிவராத்திரி. விடியற்காலம் நரகசதுர்த்தசி ஸ்நானம். தீபாவளிப்பண்டிகை.

31—10—78 செவ்வாய், சர்வ அமாவாசை, கேதார கௌரி விரதம், மாயூரம் வள்ளலார்கோயில் ஸ்ரீ மேதா தக்ஷிணாமூர்த்தி கங்காதேவியுடன் காவிரியில் தீர்த்தம் கொடுத்தருளல். ஸ்ரீ மெய்கண்டதேவர் குருபூஜை. திருப்பெண்ணுகடத்தில் ஸ்ரீ மெய்கண்டதேவருக்கு விசேஷ அபிஷேக ஆராதனை.

1—11—78 புதன், வேளூர், மாயூரம் குமரக்கட்டளை, திருச்செந்தூர், பழனி முதலிய தலங்களில்கந்தசஷ்டி உற்சவாரம்பம். வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்கும் மாயூரம் குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கும் ஆறு தினங்கள் லக்ஷார்ச்சனை.

2—11—78 வியாழன், பூசலார் நாயனுர் குருபூஜை.

4—11—78 சனி, ஐயடிகள் காடவர்கோன் நாயனுர் குருபூஜை.

6—11—78 திங்கள், கந்தசஷ்டி சூரசங்காரம், வேளூர், மாயூரம் குமரக் கட்டளை, திருச்செந்தூர் முதலிய தலங்களில் சூரசங்காரம்.

8—11—78 புதன், வேளூர் ஸ்ரீ தெய்வயானை திருக்கல்யாணம்.

9—11—78 வியாழன், வேளூர் ஸ்ரீ வள்ளியம்மை திருக்கல்யாணம்.

10—11—78 வெள்ளி, ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமி திருவீதியுலா.

12—11—78 ஞாயிறு, பிரதோஷம்.

13—11—78 திங்கள், திருமூல நாயனுர் குருபூஜை.

14—11—78 செவ்வாய், பௌர்ணமி விரதபூஜை. அன்னுபிஷேகம். நெடுமாற நாயனுர் குருபூஜை. 7-வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருவம்பல தேசிக பரமாசாரியசுவாமிகள் குருபூஜை.

15—11—78 புதன், வேளூர்க் கிருத்திகை, தருமை சண்முகர் அபிஷேக ஆராதனை. இடங்கழி நாயனுர் குருபூஜை.

16—11—78 வியாழன், கடைமுகஸ்நானம், மாயூரம் வள்ளலார்கோயில், திருவையாறு ஆகிய இடங்களில் காவிரியில் கடைமுக தீர்த்தம். விஷ்ணுபதி புண்ணியகாலம்.

மதிப்புரை :

## அங்கயற்கண் அம்மையின் ★ ★ அருள்வேட்டற் பாமாலை

உலகன்பட்டி சித்தாந்த சைவ நிலையத்தின் தொண்டர் திரு. **ம. வெ நாராயணனுர் அவர்கள்** சிறந்தபக்தர். மதுரை அங்கயற்கண் அம்மையிடத்து ஆராத அன்பு பூண்டவர். அம்மையிடத்து முறுகி வளர்ந்த அன்பின் விளைவே இத்தோத்திரப் பாமாலை. எளிமையான பாடல்கள். இந்நூலிலுள்ள முப்பது பாடல்களும் அம்மையோடு நேரில் பேசுவதுபோல் அமைந்துள்ளன. "பத்தியிலேன் பாடுகின்ற முறை அறியேன்" என்ற பதினைந்தாம் பாடலின்வரி ஆசிரியரின் எளிமையையும், பாடும் முறையை நன்ருகத்தெரிந்து மேலும்மேலும் பாடுவதில் அவர்க்குள்ள அவாவினையும் புலப்படுத்துகிறது. அனை வரும் படித்து அம்மையருள்பெறத் துணைசெய்யும் இந்நூலைப் பெற விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதிப் பெறுவார்களாக.

ம. வெ. நாராயணனுர்,
சித்தாந்த சைவ நிலையம்,
உலகன்பட்டி 622 410.

## கற்பகாம்பாள் அந்தாதி

ஞானசம்பந்தப்பெருமான் எலும்பைப் பெண்ணுக்கி, கண்ணுதற் கருணைவெள்ளத்தை ஆயிரமுகத்தால் கண்டுகளித்த திருமயிலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கற்பகாம்பாள்மீது பாடப்பெற்றது இந்தப் பிரபந்தம். ஆசிரியர் வித்யாரத்ன, கலைமாமணி, திரு. **சுத்த சத்வானந்தா அவர்கள்.** சொற்சுவையும் பொருட்சுவையும் இணைந்து, படிப்போர் உள்ளத்தில் பக்திச்சுவையை உண்டாக்கி, அம்பிகையின் அருட்கோலத்தை மனத்தில் பதியச்செய்யும் திறம் பெற்றது இது. ஆங்காங்கு அமைந்துள்ள சொற்களும் சொற்ருெடர்களும் அபிராமி அந்தாதியை நினைப்பிக்கின்றன. சிறந்த தோத்திரநூல். எளிய மக்களும் படித்து இன்புறும் இந்நூலைப் பெறவேண்டுவோர், கீழ்க் கண்ட முகவரிக்கு எழுதிப் பெறுவார்களாக.

சுத்தசத்வானந்தா,
14. சிங்காரிநாயக்கன் தெரு,
மயிலாப்பூர், சென்னை 600 004.

Printed & Published by A. Kalyanasundara Desikar, Superintendent Dharmapuram Adhinam, at the Gnanasambandam Press. Dharmapuram. Mayuram, 10—10—78